வெளியீடு எண் 120.

உ
சிவமயம்

குளத்தூர்—

# அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்

( குறிப்புரை முதலியவற்றுடன் )

திருக்கயிலாயபரம்பரைத் திருவாவடுதுறைஆதீனத்து
இருபத்தொன்றுவது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிகசுவாமிகள்
கட்டளையிட்டருளியபடி
வெளியிடப்பெற்றது.

திருவாவடுதுறை
1958.

# இப்புத்தகத்தில் அடங்கியவை

---

1. முகவுரை
2. நூலாசிரியர் வரலாறு
3. பிள்ளைத்தமிழ்நூல்
4. குறிப்புரை முதலியன
5. செய்யுள் முதற்குறிப்பகராதி

உ
சிவமயம்

# வாழ்த்து

கயிலாய பரம்பரையிற் சிவஞான
போதநெறி காட்டும் வெண்ணெய்
பயில்வாய்மை மெய்கண்டான் சந்ததிக்கோர்
மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ்
குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன் திருமரபு
நீடூழி தழைக மாதோ.

—ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள்.



திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனம்
இருபத்தொன்றுவது குருமஹாசந்நிதானம்
ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக சுவாமிகள்

சிவமயம்

# முகவுரை

"தேசிக நாதன் சிவஞான தேவன்செங் கைத்தலமுன்
வீசிநின் ருடிய வம்பல வாணன் வியனுலகம்
பேசிய பஞ்சாக் கரவன் பிறங்கருட் டாண்மலரைக்
கூசிநின் றேத்திய மாதவத் தார்க்கென் குறையுளதே."

செந்தமிழ்நாட்டில் சிலகாலத்துக்கு முன்வரையில் இருந்துவந்த தமிழ்ப் பள்ளிக்கூடங்களில் தமிழ்கற்கின்ற மாணவர்கட்கு முதன்முதலில் நீதிநூல்களும், பிரபந்தங்களும் முறையாகக் கற்பிக்கப்பட்டுவந்தன. அவற்றுள், ஔவையார் அருளிச்செய்த ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி முதலியனவும், ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச்செய்த நன்னெறியும், ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் அருளிய நீதிநெறிவிளக்கமும், ஸ்ரீ மாதவச்சிவஞானயோகிகள் அருளிய சோமேசர் முதுமொழி வெண்பாவும் நீதி நூல்களுள் தலைசிறந்தனவாக எடுத்து ஒருதலையாகக் கற்பித்தனர் ஆசிரியர். அதன்பின் நான்மணிமாலை, மும்மணிக்கோவைகளைக் கற்பிப்பர். பின்பு அந்தாதி, பிள்ளைத்தமிழ், கலம்பகம், உலாப்போன்ற பிரபந்தங்கள் கற்பிக்கப்பட்டன. ஒவ்வொன்றிலும் பல நூல்களைப் படித்தவர்களும்

பிரபந்தங்களின் வரிசையில் அஷ்டப்பிரபந்தம், ஸ்ரீ சிவப்பிரகாசசுவாமிகள் பிரபந்தங்கள், ஸ்ரீ குமர குருபரசுவாமிகள் பிரபந்தங்கள், ஸ்ரீ மாதவச்சிவஞான யோகிகள் பிரபந்தங்கள் என்பவைகளும் மாணவர் கட்குப் பாடஞ்சொல்லப்பட்டன. இந்த வரிசையில் நூல்களை நோக்கும்போது தமிழ் மாணவர்கட்கு ஒழுக் கத் தெளிவும், கடவுட்கொள்கைத் தெளிவும் நன்ருக வேரூன்றி நின்றன என்னலாம். இலக்கிய நலங்களும், கற்பனை நயங்களும், ஆசிரியர்களுடைய அருட்பெரு நலங்களும் அறிந்தறிந்து இன்புறுதற்கு வாய்ப்பாகவும் அவைஉள்ளன. அந்தவகையில் பிள்ளைத்தமிழ் என்று எண்ணும்போதெல்லாம் நம் முன்னர்வந்து நிற்பது முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழும், மீனுட்சி யம்மை பிள்ளைத்தமிழுமே. தமிழ்நாட்டில் பெரும் பாலோர் அறிந்திருந்தது அவ்விரண்டனையுமே ஆம்.

சிறப்பாக நூலறிவுபடைத்தோர் சிவஞானசுவாமி கள் பிரபந்தங்களைக் கல்லாமலிரார். அவை அத்துணைச் சிறந்தன எனப் பெரியோர்களால் பாராட்டப்பட்டன. மதுரைத் தமிழ்ச்சங்கத்தைத் தோற்றுவித்துச் செந் தமிழ் நூல்களை அறிவுறுத்தத்தொடங்கிய காலத்திலே பிரவேசபண்டித பரீட்சைக்கு உரிய பாடங்களுள் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் முதலிடம் பெற்றது. அதற்குக் காரணம் சங்கத்தைத் தோற்றுவித்த ஸ்ரீ பாண்டித் துரைசாமித்தேவரவர்கள் தமது இளமைப் பருவத்திலே தமிழ் நூல்களைக் கற்கத்தொடங்கிய காலத்து இந்தத் திருவாவடுதுறை ஆதீனத்துக் கல்வி பெற்ற ஆசிரியர் மூவர்பால் பயின்றனர். அவருடைய ஆசிரியர்கள் நால்வருள் மூவர் திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்தவர்கள் என்பதில் அவருக்குப்

பெருவிருப்பம் உண்டு. அவர்படித்தகாலத்திலேயே இவ்வாதீனத்தில் கல்விபயின்ற மதுரை - இராமசாமிப் பிள்ளையைக்கொண்டு ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகள் பிரபந்தங்களை அச்சில் பதிப்பிக்கச்செய்தனர் என்ற ஒன்றே இவ்வாதீனத்திலும், சிவஞானசுவாமிகளிடத்திலும் அவர்வைத்துள்ள குருபத்தியைப் புலப்படுத்தும். தமிழ்ச்சங்கக் கலாசாலையில் உள்ள மூன்று வகுப்பு (பிரவேசம், பாலபண்டிதம், பண்டிதம்) களிலும் சுவாமிகள் அருளிய நூல்களையும் உரைகளையும் பரீட்சைக்குப் பாடமாக அமைப்பித்தார். ஒரு சித்திரை ஆயிலியத்தில் சுவாமிகள் குருபூசை நாளன்று சிவஞானசுவாமிகள்மீது இரட்டைமணி மாலையை இயற்றி அரங்கேற்றினர். அந்த இரட்டை மணிமாலை நூலுக்கு ஒப்பு அந்நூலே என்பதில் தடையில்லை. இளமைப் பருவத்திலே விதைக்க வேண்டிய நல்ல விதைகள் சுவாமிகள் அருளிய சிறு பிரபந்தங்களில் நிறைந்துள்ளன. 'விளையும் பயிர் முளையிலே' என்றபடி அந்தச் சிறு நூல்களில் உள்ள நல்லபயிற்சி பெரியநூல்களில் மாணவர்கள் தாராளமாக நுழைந்து விளையாடற்குப் பெரிதும் துணைசெய்யும்.

இனி, அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ் என்னும் இப்பிரபந்தத்தை அருளிச் செய்தவர்கள் திராவிட மாபாடியகாரராகிய ஸ்ரீமாதவச்சிவஞானசுவாமிகளே. அமுதாம்பிகை குளத்தூரில் கோயில்கொண்டருளும் அம்பிகையாவர். சென்னைக்கு அருகிலுள்ள பெரம்பூர் ரெயில்வே ஸ்டேஷனிலிருந்து குளத்தூர் 3 மைல் தூரத்தில் உள்ளதென்பர். இவ்வூர் இந்த மகானால் இப்பிள்ளைத்தமிழையன்றிச் சோமேசர் முதுமொழி

வெண்பா, குளத்தூர்ப் பதிற்றுப் பத்தந்தாதி என்னும் பிரபந்தங்களையும் பெற்றுள்ளது.

தொட்டிக்கலை ஸ்ரீ சுப்பிரமணியமுனிவர் இவர்கள் மாணவர் ஆகலின் ஸ்ரீ மாதவச் சிவஞானசுவாமிகளைச் சென்னையிலும், குளத்தூரிலும், தொட்டிக் கலையிலும் தங்கும்படி செய்து, தமிழுலகத்துக்கு வேண்டிய நலங்களைத் தேடிவைத்தார். கவிராக்ஷஸ ஸ்ரீ கச்சியப்பமுனிவர் இவர்களைக்காஞ்சிபுரத்தில் எழுந் தருளியிருக்கச்செய்து காஞ்சிப்புராணம், திராவிட மாபாடியம் இவற்றையருளப் பெரிதும் காரணரா யிருந்தனர். திருவாவடுதுறை ஆதீனத்தில் பன்னிரண் டாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த திருச்சிற் றம்பலதேசிகரும் சுவாமிகள் மாணவர் பன்னிருவருள் ஒருவரே, திருச்சிற்றம்பலதேசிகர் சென்னைக்கு அரு கில் உள்ள அரும்பாக்கத்தில் தொண்டைமண்டல வேளாளர் குலத்தில் தோன்றியவர்கள். அங்கேயும் ஒருமடம் உண்டு என்பர்.

குளத்தூரில் உள்ள சிவபெருமான் திருநாமம் சோமேசர் என்பது. அம்பிகை திருநாமம் அமுதாம் பிகை. சந்திரன் பூசித்துப் பேறுபெற்ற தலம் இது. சந்திரனல் உண்டாக்கப்பெற்ற தீர்த்தம் ஒன்றுளது. குளத்தால் இவ்வூர் பெயர்பெற்றது. கமலாகரபுரம், கமலாகரம் எனவும் இந்நூலுள் வழங்கப்பட்டுளது.

புராண மறை ஆகமம் அளந்தறிவரும் புங்கவன், கொன்றையினன், சிவவாழ்வு, பரமானந்தப் பெரு வாழ்வு, ஆனந்த மெய்ப்பண்ணவன், பேரானந்த

வெள்ளக் கொழுங்கடல், உருவாய் அளவரும் அருவாய் நிறைபொருள், முதுநான்மறை அறிவறியா வடிவினன், உய்ய வரந்தரு நித்தன், திருச்சோமநாதனார் எனச்சிவபெருமான் இதனுள் குறிக்கப்பெறுகின்றார்.

கமலாகரமயில், கல்யாணசவுந்தரி, பூரணஞான புராதனி, அமிழ்து, அமுது, அமுதம்மை என அம்மையார் குறிப்பிடப்படுகிறார்.

மும்மலங்கள், பரிபாகபேதம், மெய்த்தொண்டு செயும் அன்பர், சிவபத்தி குருபத்தி சங்கமபத்தி, சிவ தருமம், சரியை கிரியாயோகங்கள், சிவஞானம், திருநீறு அக்கமணி திருவைந்தெழுத்து, வேதநெறி சைவ நெறிகள், தொண்டர்குழாம், வெள்ளானை, அந்தரக் கங்கை, சர்வம்சத்திமயம், மகளிரான் மலரும் மரம், சிவஞானிகளுக்குத் தினையளவு கொடுப்பவர் அழியாத திருவையும் பெறுதல் முதலியன அங்கங்கே ஏற்ற பெற்றி கூறப்பட்டுள்ளன.

கங்கையாறு ஒன்றே பாலிநதியோடு ஒக்கும் எனல், கீர்த்தி பிரதாபங்கள், அடியார் மலமோடல், மூங்கில்முத்து, எவற்றினும் தோய்வற்று நிற்கின்ற சிற்பரம்பொருளை ஒத்திருத்தல், இராகுகேதுக்கள் சகோரம் சக்கரவாகம் இவற்றின் உணவு, மேரு மலையை வளைத்தல், அயன் அரி உருத்திரன் பரம் பொருள் இவர்நிறம், சங்கநிதி பதுமநிதிகள், இந்திரன் மலைகளின் சிறகறுத்தமை, இறைவர்கண்களை இறைவி புதைத்தமை, சிவபெருமான், கங்கை பாந்தள் தும்பை கடுக்கை கபாலம் கொக்கிறகு ஊமத்தம் ஆத்தி வன்னி எருக்கு அறுகம்புல் மந்தாரம் சந்திரன் இவற்றைத் தரித்திருத்தல், அம்மையார் இறைவர்

திருமேனியிற் செம்பாதி கொண்டிருத்தல் முதலிய செய்திகளும் இதனுள் விளங்கக் காணப்படுகின்றன.

சந்திரன் குருமனைவியைப் புணர்ந்தமை, இந்திரன் உடம்பில் குறிகள் உள்ளமை பேசப்பட்டுள்ளன. முருகவேள், திருஞானச்செம்மற் குழவி, விந்தியமலை, வெள்ளிவேதண்டம், மந்தரம், மேரு, அயிராவணம், அயிராவதம், வேதங்களால் அறிதற்கரியன் சிவபெருமான் எனல். வேதக்குழாம் கதறி ஓலிடல், ஆலகால விடமுண்டமை. அர்த்தநாரீசுவரர் உருவுக்குக்காரணம் கற்பித்தல், ஐங்கரக்களிறு, சிவபெருமானை நிகர்ப்ப இறைவி மும்மலச் சோவைப் புன்மூரலால் அழித்தல். அம்பிகை கரங்களில் கருப்பு வில்லும் பஞ்சபாணமும் உடைமை, ஐவகைச் சுத்தியும் அமைத்துச் சிவாகம நெறியில் சிவனைப் பூசித்தல் முதலிய அரிய செய்திகளும் இடம் பெற்றுள்ளன. வெண்ணீறுபூசிய மெய்த்தொண்டர் மிகப் பேசப்படுகின்றார். வேங்கை மகவுக்குப் பாற்கடல் அளித்தமை, கழைக்கூத்தர் திறம், குளிர்காலத்துப் புனலிலும் வெயில் காலத்துக் கனலிலும் இருந்து தவமாற்றுதல், சூரியன் பச்சைப் புரவிகள், குழவிகள் நிழலைத் தம்மினமெனக்கருதி ஆட அழைத்தல், முலைத்தழும்பும்வளைத்தழும்பும்பட இறைவர் குழைந்துகாட்டியமை, நிலப்பொட்டிடல், இமையமலையரையன், மேனை, இருமைவினை, கருமப்பகுதி, குமரியிருட்டு, குயில் வாயடைத்தலும் இசை எழுப்புதலும், பெருச்சாளி விநாயகர் வாகனமாதல், கண்ணன் சூரியனைச் சக்கரத்தால் மறைத்தல், விநாயகரை எப்பகுப்பிலும் வைத்துப் போற்றுவதரிதெனல் இவைகள் கூறப்பட்டுள்ளமையும் காணலாம்.

உமாதேவியார் சரவணப்பொய்கையில் முருகக் கடவுள் ஆறு உருவங்களையும் ஒருருவாக அணைத் தெடுத்தமை, பாலூட்டியது, சீகாழி பிரளய வெள் ளத்தில் மிதந்தமை, முருகவேள் பிரமனைச் சிறையிட் டமை, மேருமலை பூமிக்கு ஆதாரமாய் இருத்தல், சந்திரனிற் களங்கம், சந்திரன் பதினாறு கலைகளைப் பெற்றிருத்தல், சந்திரனிடத்திலுள்ள அமுதத்தைத் தேவர்கள் உண்ணுதல், சந்திரன் உதயகாலத்திலும் அத்தமன காலத்திலும் சிவந்திருத்தல், அரிபிரமர் அடி முடி காணாமை, சூரியமண்டலம் சந்திரமண்டலம் அக்கினி மண்டலங்களில் சிவசத்தி வசித்தல் என்னும் செய்திகளும் பிறவும் இந்நூலில் உள்ளன.

இந்நூலினுள் உவமை, உருவகம், சிலேடை, மடக்கு முதலிய அணிகள் சிறப்பாகவுள. பழமொழி களையும் எடுத்தாண்டுள்ளார். இப்பிள்ளைத்தமிழைப் படித்தபின் வேறொரு நூலில் அறிஞர்க்கு மனம் செல்லாது என்பதை அநுபவத்திலேதான் உணர வேண்டும். பிறர்கூறும் ஒரு செய்தியைத் தாம் எடுத் துக்கொண்டு செவ்வையாக விளக்கி மனத்தில் பதிய வைக்கும் ஆற்றல் மிகப்படைத்தவர் இவர் என்பதை நீராடற்பருவத்தில் 7-ஆம் பாடலும், அம்மானைப் பருவத்தில் சில பாடலும் விளக்கும். அம்புலிப் பருவத்தில் சாம பேத தான தண்ட உபாயங்களை எடுத்துக்காட்டும் காட்சி என்றும் அறிஞர் உள்ளத் தில் நிலைபெற்று விளங்கும்.

இப்போது இவ்வாதீனத்திலே திருமந்திர மாநாட் டையும், சித்தாந்த சைவ மாநாட்டையும் ஆண்டுகள் தோறும் கூட்டித் தமிழுலகம் சாத்திர தோத்திர

நூல்களின் அருமையை எளிதில் அறிந்துய்யத் திரு வுளங்கொண்டு விரிவுரைகள் வாயிலாகவும், நூல் உரைகளின் வாயிலாகவும் தமிழ்மக்கட்குப் பேரருள் புரிந்து 21-வது குருமஹாசந்நிதானமாக வீற்றிருந்து குருக்ஷேத்திரசிவக்ஷேத்திரபரிபாலனங்களும், சித்தாந்த சைவசமய பரிபாலனம் செந்தமிழ்ப் பரிபாலனங்களும் சிறந்து விளங்கச்செய்து ஞான அருட்செங்கோ லோச்சும் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணியதேசிக சுவாமிகள் கட்டளையிட்டருளியபடி இந்த அமுதாம்பிகை பிள்ளைத்தமிழுக்கு என் அறிவு சென்ற அளவிலே ஒரு குறிப்புரையும் ஆராய்ச்சி முகவுரையும் எழுதி அச்சிடு வித்துச் சித்திரை ஆயிலிய நாளாகிய இன்று வெளிப் படுத்தியுள்ளேன். இதன்கண் உள்ள ஆராய்ச்சியுரை யும், குறிப்புரையும் இந்நூலைக் கற்கும் மாணவவுலகத் துக்குப் பெருந்துணை செய்யும் என நம்புகின்றேன்.

பிள்ளைத்தமிழைப்பற்றிய இலக்கணங்கள் இதன் முன்பு வெளிவந்த சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், திருஞானசம்பந்தர் பிள்ளைத்தமிழ்களிலே என்னால் மிக விரிவாக எழுதப்பட்டமையின் இதில் அவ்விலக்கணம் சேர்க்கப்பட்டிலது. இதன்கண் என் அறியாமையால் நேரிட்ட பிழைகளையெல்லாம் அறிஞருலகம் பொறுத் தருள

இங்ஙனம்,

சித்தாந்தசைவமணி—

திருவாவடுதுறை
23—4—1958.

த. ச. மீனாட்சிசுந்தரம்பிள்ளை,

ான்.

# நூலாசிரியர் வரலாறு

இந்நூலாசிரியரது பிள்ளைத்திருநாமம் முக்களா லிங்கர் என்பது. இவர்களுடைய தீட்சாநாமம் சிவ ஞானமுனிவர் என்பதாம். தவத்தான் மிக்கோருடைய சூழலில் தலைமை பூண்டொழுகிவந்தமையின் இவர் மாதவச் சிவஞானமுனிவர் என யாவரானும் கொண் டாடப் பெற்றார். சிவஞானிகளுக்குரிய இலக்கணங் கள் எவற்றினும் குறைவற நிறைந்து இவர் ஞான யோகியாகவே விளங்கியமையான் இயல்பாகப் பெற்ற தீட்சா நாமமே காரணத் திருநாமமாகவும் சிறந்தது ஆகலின், இவர்களை ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகள் எனச் சந்நிதானங்களும், தம்பிரான் கூட்டத்தினரும் வழங்கி வந்தனர். ஸ்ரீ மெய்கண்ட தேவ நாயனார் அருளிச் செய்த சிவஞான போதத்துக்குத் தமிழிலே பேருரை கண்ட பெரியோர் இவராகலின், திராவிட மாபாடியகாரர் என அறிவுடையுலகம் இவரை அழைப்பதாயிற்று. ஆதீனத்தில் உள்ள அனைவரும் இவரை 'ஆதீன குலதெய்வம்' எனப் பாராட்டினர்.

பண்டை நற்றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்திபண்ணும் நல்ல குடியிலே அவதரித்துத் திருவா வடுதுறை யாதீனத்தில் மிக இளமைப் பருவத்திலே வந்தடுத்துத் தீட்சை முதலிய யாவும் பெற்றுச் சிறந் தனர். மகத்துவமிக்க அகத்திய முனிவர் வரத்தால் இவர் தோன்றியவராதலின் மிக எளிதாக வடமொழிக்

கடலும். தென்தமிழ்க் கடலும் நிலைகண்டுணர்ந்தனர். பிள்ளையாகவுள்ள முக்களாலிங்கருடைய தந்தையார் ஆனந்தக்கூத்தர் என்பவர்; தாயார் மயிலம்மையார் என்பவர். இவருக்கு ஒரு சகோதரர் உண்டு. சிறிய தந்தையார் நமச்சிவாயக் கவிராயராவார். அவர் சிங்கைப் பிரபந்தங்கள் பலவற்றைச்செய்து புகழ்பெற்ருர். ஏழுதலைமுறைகளில் தெய்விகப் பெரும் புலவர்களாக இவர் குடும்பம் விளங்கியது. அவர்கள் சந்ததியாரும் நல்ல கல்வியறிவுள்ளவர்களாகவே விளங்கி வருகின்றனர்.

ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகளுடைய ஞாஞசாரியர் பேரூர் - வேலப்பதேசிகமூர்த்திகள். இவர்கள் பத்தாம்பட்டத்து வேலப்ப தேசிகமூர்த்திகள் காலத்தில் சின்னப்பட்டத்தில் இருந்தபடியே பேரூரில் சிவ பரிபூரணம் பெற்றனர். பேரூர் - வேலப்பதேசிகர் அருளிய நூல் பஞ்சாக்கரப்பஃறொடை என்பது. அந்நூல் பண்டாரசாத்திரம் பதிஞன்கனுள் ஒன்ரும். பேரூர் வேலப்பதேசிகருக்குப்பின் மற்றெரு வேலப்பத்தம்பிரானைச் சின்னப்பட்டத்தில் இருத்திஞர்கள். இவர்களே 11-வது பட்டம் வேலப்பதேசிகமூர்த்திகள். இவர்கள் திருப்பெருந்துறையில் சிவபரிபூரணம் அடைந்தனர்.

இனி, திராவிடமாபாடியகாரராகிய இந்நூலாசிரியர் மாணவர்களில் இலக்கணம் - சிதம்பரநாத முனிவர் திருச்சிற்றம்பல தேசிகரிடத்தில் சிவதீட்சையும், சைவசந்நியாசமும், சிவஞாஞேபதேசமும் பெற்றனர். இராமநாதபுரம் சோமசுந்தர குருவும் இந்த

ஞானுசிரியரிடத்திலேதான் உபதேசம் பெற்றனர். கவி ராக்ஷஸ - கச்சியப்பமுனிவரும், தொட்டிக்கலே - மதுர கவி - சுப்பிரமணிய முனிவரும் 12-வது மகாசந்நி தானம் திருச்சிற்றம்பலதேசிகர் பெரிய பட்டத்தி லிருந்து சிவாகம ஆராய்ச்சியையே பொழுதுபோக் காகக் கொண்டிருந்தமையாலும், சிவானந்த நிட்டை யிலிருந்தமையாலும் அப்போது சின்னப்பட்டத்தில் உள்ள அம்பலவாணதேசிகர்பால் சைவசந்நியாசமும் சிவஞாேனுபதேசமும் பெற்றுக்கொண்டனர்.

ஸ்ரீ சிவஞானசுவாமிகள்பால் மாணவர் யாவரும் இடையருத பேரன்புகொண்டு மிக அச்சத்துடன் ஒழுகிவந்தனர். மஹாசந்நிதானங்களும் பேரருளுடன் நடத்திவந்தார்கள். திராவிடமாபாடியம், 11-வது பின் வேலப்பதேசிக மூர்த்திகள் பெரிய பட்டத்திலும் 12-வது திருச்சிற்றம்பலதேசிகமூர்த்திகள் சின்னப் பட்டத்திலும் எழுந்தருளியிருந்தகாலத்தில் அரங்கேற் றப்பட்டது. திராவிடமாபாடியத்தைக் காஞ்சிபுரத் திலே சுவாமிகள் எழுந்தருளியிருந்து எழுதிமுடித் தார்கள். பின்பு சிவஞானபோதத்துக்குச் சிற்றுரை யும், சிவஞான சித்தியாருக்குப் பொழிப்புரையும் செய்தருளினர். இளம்பருவத்திலேயே மாணவர்கள் சிவநெறியில் வாழவேண்டிப் பிரபந்தங்கள் பலவற் றையும் செய்தார்கள். சிவதத்துவவிவேகம், தர்க்க சங்கிரகம் - அன்னம்பட்டீயம் முதலியவற்றையும் மொழிபெயர்த்தருளிஞர்கள். நன்னூலுக்குப் புத்தம் புத்துரை, இலக்கணவிளக்கச் சூருவளி, தொல் காப்பியப் பாயிர விருத்தி, முதற்சூத்திர விருத்தி களும் செய்து இலக்கணநுட்பங்களையெல்லாம் நன்கு தெளிவு படுத்தினர், சிவஞானபோதம்

மாபாடியத்துக்கின்றியமையாத இலக்கண இலக்கிய தர்க்கநூல் உணர்ச்சிகள் பெறவேண்டுவதற்கு ஆவன வெல்லாம் திருத்தமாகச் செய்து முடித்துப் பெரும் புகழ்படைத்தனர். சில கண்டன நூல்களையும் இவர்கள் எழுதினார்கள்.

எவ்வாற்றானும் சிறப்புற்று விளங்கிச் சிவானுபூதி கைவந்த இந்த நூலாசிரியர் திருவாவடுதுறையிலே ஒரு சித்திரைமாத ஆயிலிய நாளில் சிவபரிபூரணம் எய்

*" மன்னும் விசுவா வசுவருடம் மேடமதி*
*உன்னிரவி நாட்பகலோ தாயிலியம் - மன்னும்*
*திருவாளன் எங்கோன் சிவஞான தேவன்*
*திருமேனி நீங்கு தினம் "*

என்னும் வெண்பா சுவாமிகள் சிவபரிபூரண நாளை யுணர்த்தும்.

இவர்களைப் பிரிதல் ஆற்றாத தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் "நினைத்தாற் சகிக்கப்போமோ" என்னும் பாடலால் தம் கருத்தை வெளிப்படுத்தினர். அன்றியும், அவர் தொட்டிக்கலையில் சுவாமிகள் திருவுருவத்தை அமைத்துப் பூசித்து வழிபட்டார்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# குளத்தூர்—
# அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்

## ஆசிரியர்கருத்து

மனம்வாக்கி லெட்டாத சிற்சத்தி யாயிடினும்
மன்பதைக ளுய்யவேண்டி
மலையரையன் முதலோ ரிடத்தவ தரித்தொரு
மடப்பிள்ளை யாய்வருதலால்
இனநாட்டி வாழ்த்திடுவர் பெரியோர்கள் வாழ்த்தற்
கெடுத்தவித் தாரகவிதாம்
எண்ணிடிற் பலவா மவற்றிற்கு முதலாக
ஏன்றபெண் பிள்ளைக்கவி
முனிவோட்டு காப்புநற் கீரைதால் சப்பாணி
முத்தம்வா ரானைமற்றும்
மொழியுமம் புலிப்பருவ மம்மானை நீரூசன்
முறையினை யிருபருவமும்
நனிவாய்த்த வகவலின் விருத்தத்தி னுற்பாடி
நவிலுமுத் திங்கண்முதலா
நயந்தமூ வெழுதிங்க ளளவினிற் கேட்பிக்கும்
நன்மைய தெனப்புகல்வரே.

## அவையடக்கம்

இளம்பருவ விளையாட்டை நோக்குழித் திருவுரு
விடத்தாசை மிகுதியுண்டாம்
என்பதால் வித்தார கவிக்கெலா முன்னுற
இயன்றபிள் ளைக்கவியிதைக்
குளந்தையிற் சோமேசர் மார்பினைக் கொங்கையாற்
குழைவித்த வமுதவல்லி
கோமளப் பருவத்தி லருகொன்று தாதியர்சொல்
கூற்றெனப் புகழ்தலுற்றேன்
வளம்பெருகுமிமையவருமேத்தொணுப்பெருமாட்டி
மகிமையென் புன்மொழிகளால்
வாழ்த்தரிய தாமெனினு மாங்கவள் கிரிக்கிறை
மகளாகி யதுவுமல்லால் [வன்
உளங்கொடியர் வாழ்வலைச் சேரியினு மவதரித்
தொளிர்பாசி சங்குபூட்டி
உண்மகிழ்ந் தருளுதலி னென்மொழிக் கும்பெரி
துவந்தருள் சுரக்குமெனவே.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# குளத்தூர்

# அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்

விநாயக வணக்கம்

மணிகொண்ட கோடொரு மருங்குண்மை யாற்பெண்
வடிவென்று மஃதின்மையோர் [மை
மருங்குண்மை யாலாண்மை வடிவென்று மீதுகீழ்
மாறிய திருக்காட்சியால்
அணிகொண்ட வுயர்திணைய தென்றுமஃ றிணையென்
யார்க்கும் கிளக்கவரிதாம் [றும்
ஐங்கரச் சிந்துரத் தின்கழற் செஞ்சரணம்
அஞ்சலித் துத்துதிப்பாம்
பணிகொண்ட துத்திப் படத்திற் கிளைத்தவிர்
பரூஉமணி விளக்கிஞெருபாற்
பாயிருட் படலஞ் செறிந்தொளிர்வ தென்னவப்
பாம்பணை கிடக்குமொருவன்
திணிகொண்ட மல்லற் புயக்குவடு விம்மத்
திளைக்குமகள் வாணிபிரியாத்
தென்குளந் தாபுரி யிருந்தவமு தாம்பிகை
செழுந்தமிழ்க் கவிதழையவே.

# நூல்

## முதலாவது
## காப்புப்பருவம்

### திருமால்

சீர்கொண்ட கஞ்சக் கிழத்திதன் காந்தனைச்
சிறைசெய்த வாறறிந்தாற்
செயிர்த்துநம் திருமனைவி மகன்மருகி தமையெலாம்
சிறைசெய்யு மென்றறிந்தும்
ஏர்கொண்ட மைத்துனக் கேண்மையா லர்ச்சுனற்
கிறுதிநாள் பயவாமையே
எண்ணிமுன் பரிதியைப் பரிதியாற் றடைசெய்த
வேந்தற் பிரான்புரக்க
பேர்கொண்ட மேனிலச் சோபான மிசையேறு
பேதைமார் முகநோக்கிநம்
பேரரசு கொள்ளவரு மதிபோலு மிதுவெனுப்
பெரிதுமேக் குற்றவர்கடம்
கார்கொண்ட பின்னற் கரும்பாந்தள் கண்டுளங்
கவலாது களிகூர்ந்துதண்
கலைமதியம் வைகுபொழில் சூழ்குளத் தூர்வருங்
கடவுட் பிராட்டிதனையே. 1

### சிவபெருமான்

#### வேறு

அளிசு ரந்தமரர் பசிகெ டும்படியின்
அமிழ்து தந்தகதிர் கொள்சடைக் காட்டிடை
அழல்வி டஞ்சொரியு மரவி னம்பசிய
அறுகு வெண்டலைகள் பல்குறச் சூட்டியும்

அரிய யன்பரச வவரி டும்பைதெறும்
அலர்செ ழுங்கமலம வெல்காத் தோட்டிடை
அணைவு றும்பொருள்கள் கருக வெம்புசுடர்
அவிரு மங்கியினை வெய்தெனக் காட்டியும்
இளிவ ரும்பொன்மலை வளையு முன்பவுணர்
எயிலொ ருங்கவிய வெள்ளுபொற் றேட்கிடை
இடுவ னங்களினி லுயிர்ம டிந்தவர்தம்
இகழு மென்பினையு மைதெனப் பூட்டியும
எழுத ருஞ்சொன்மறை முடிவு மன்பர்தம
திதய மும்பரவ நல்குமெய்த் தாட்டுணை
எமது புன்றலையு முறந யந்துமரு
ளியப ரம்பரனை யுள்ளுறச் சேர்த்தும்
தளிர்து வன்றியிருள் படரி ழுன்றுகுளிர்
தழுவி வண்டுதுதை செய்துணர்ப் பூத்திரள்
ததைவு கொண்டுநறு மணம ளைந்துமகி
தலம சும்புபட வெள்ளமட் டூற்றெழு
தரவ ளர்ந்துமுகி லகடு டைந்தழகு
தபவு தைந்துதிசை யெல்லையைக் காத்திடு
தறுக ணெண்கரியை முடுகு றுங்கருவி
தருமி தென்றெவரும் விள்ளமொய்த் தார்த்
ஒளியு மிழ்ந்துலவு பரிதி மண்டலமும் [தவிர்
உடுப மண்டலமு நில்லெனத் தாழ்த்திவிண்
ணுலகு சென்றுசுரர் தருவொ டும்பழகி
உறவு கொண்டுமகிழ் பல்வளக் காக்களின்
உறைப சுங்கிளிகள சுருதி சந்தையுடன்
உரைசெய் கின்றதனை மல்குபுத் தேட்குலம்
ஒளியி ருந்துகவர் பதிகு ளந்தைவரும்
உரைவி ளங்கமுத வல்லியைக் காக்கவே. 2

## விநாயகக்கடவுள்

### வேறு

ஒற்றைச் சுதைத்தனுக் கோட்டியெங் கனுமின்னி
யோவாது மும்மாரிபெய்
தொண்பூ தலத்துலவு செங்கொண்டல் போலு
றுன்னியச் சுற்றியாமிதற் [மென்
கெற்றைக்கு மூர்தியா யுற்றிடக் கடவமென்
றிருண்மேக மருகுவந்தாங்
கிலகுகரு மூடிகத் தாதிப் பிரான்சரணம்
ஏத்தெடுப் பாமெம்பிரான்
கற்றைப் பிறைக்கொழுந் தொளிர்சடில வட்டமேற்
கணம[illegible]ப படம
கண்வளரு மகிநீர்மை தலையுவா ஞான்றுசெங்
கதிர்க்கிர கணங்கடுக்கும்
பெற்றித் திறங்தெரிந் தானந்த வெள்ளப்
பெருங்கடல் குடைந்தாடுறூஉம்
பெண்ணணங் கரசியைத் தென்குளத் தூரெம்
பிராட்டியைக் காக்கவெனவே. 3

## முருகக்கடவுள்

மாங்குயி றுரந்துசுவை யூற்றெழ மிழற்றுமொழி
வானமீன் மாதராறுவர்
மருமத் தெழுந்தபொன் வள்ளத்தி னமிழ்துண்டு
மருவிவாழ் தற்குரியதன்
தேங்கமல வீட்டினைத் தனதெனக் கொண்டுவாழ்
திசைமுகனை வெய்துயிர்த்துச்
சிரநான்கு மோதிப் புடைத்துப் பிணித்துவன்
சிறையிட்ட தேவைநினைவாம்

ஓங்கலொரு வில்லா வளைத்தெயி னகைத்தனலை
யூட்டியருள் சோமேசனார்
ஒருமூ விழிக்கிடைந் தஞ்சிச் சரண்புகுந்
தோலமிடு புண்டரீகம
பூங்குவளை மாரனுக் கருள்செய்து முகமெனப்
போர்கொண்ட வாள்விழியெனப்
பொய்த்தநுண் ணிடையெனத் தாங்கும் குளந்தா
புரிக்குளமு தைக்காக்கவே. 4

## பிரமதேவர்

### வேறு

தவளக் குரூஉமணி குயிற்றியொளிர் தமனியத்
தன துமனை வாயினிறுவும்
தண்ணிய விதழ்க்கத வடைத்துத் திறக்கும்
தனித்தொழிலை வண்டுமுரலும்
பவளச் சரோருகத் தன்னைதன் னேடுற்
பவித்தபுல வற்குமந்தப்
பண்ணவற் கெதிரான புலவற்கு மாகப்
பணித்தவிறை வன்புரக்க
கவளக் கடாங்கவிழ் கவுட்டுணை நெடுங்கைக்
களிற்றுப் பிடர்த்தலைவரும்
கண்ணு யிரங்கொண்ட விண்ணுடர் கோமகன்
கற்பகச் சோலைவிடபம்
துவளக் குடங்கைத் தலத்தினிற் கோட்டித்
துணைத்தமுலை மாதர்மலர்கொய்
தூமணித் தெற்றிக ணெருங்கிய குளந்தைவரு
சுந்தரப் பெண்ணமுதையே.

## தேவேந்திரன்

அதிருந் தரங்கக் குண்டகழி.
அளறு படப்புக் குழக்கிமுழுக்

தடுக்க லெடுத்துத் தெறித்துவெகுண்
டெதிருங் குழூஉக்கொள் படைகவல
இடறுங் கறைத்தாட் பரூஉத்தடக்கை
இறைக்குங் கடவெண் களிற்றியானை
எருத்தத் திவரும் புருகூதன்
சுவைத்தெள் ளமிழுதொழுகு
முழுவெண் ணிறத்து மதிக்குழவி
முருகு விரியுங் கடவுணதி
முழுகித் திளைக்குஞ் சடைப்பெருமான்
க நம் விழிக ளிருள்சீப்பக்
கங்குற் பொழுதி ஞெருங்கிருந்து
கலவிக் குறிப்பிற் குளநாணும்
கமலா கரியைப் புரக்கவே. 6

## இலக்குமி

கடிப்போ தலர்த்திக் கருஞ்சுரும்பர்
களித்துத் துயில்கூர் கற்பகப்பூங்
கானம் பயிலுங் காமர்நகர்க்
கவலை துரந்தின் னமிழ்தளித்துப்
படிப்பாற் பயிலு மகளிடத்துற்
பவித்துப் புவன மூன்றனையும்
பரிக்குந் திகிரிப் படைப்பாணிப்
பகவன் மருமத் துறைமடந்தை

விடப்பாம் பிரவி வெம்மைமிசை
மேவா வண்ணங் குடைகவிப்ப
விரிக்குங் கதிர்ச்செம் பவளநிற
வேணி யணையாப் புனிற்றுமதி
முடிப்பா லரசு வீற்றிருக்கும்
முதல்வ னிடப்பா லிருந்துலக
முழுது முயிர்த்த குளந்தைநகர்
மொய்பூங் குழலைப் புரக்கவே. 7

## சரசுவதி

அளிக்கா தரவுற்றுச் சுவைத்தகள்
அளித்தார் வனசத்துப் பொகுட்டயன்
உளத்தா மரைநச்சத் திளைத்தவன்
உரைப்பா லருள்பெற்றுத் தரித்தவள்
களத்தால மடக்கிச் சுரர்க்கிடர்
களைத்தேய வொறுத்துக் கடைக்கணி
குளத்தூர் நயனத்தற் கிடத்தமர்
குளத்தா ரமுதத்தைப் புரக்கவே. 8

## காளி

### வேறு

துளிக்கும் பசுந்தே னுவட்டெடுத்துச்
சொரியுஞ் செழுந்தா மரைப்பொகுட்டுத்
தோன்றற் பெருமான் முதற்கடவுட்
டொகுதிப் பைங்கூழ் களைக்கருக்கிக்
களிக்கு மகிடா சுரக்களையைக்
களைந்து சிரமேற் பாசடையிற்
கமல மெனத்தாள் பதித்திவர்ந்த
கன்னி யெனுந்தெய் வதங்காக்க

பளிக்கு மணிமா டங்கடொறும்
பதிந்த தமது சாயலினைப்
பாரா வினமென் றிளஞ்சேய்கள்
பரிந்து பரிந்து வருகவென
விளிக்குங் குளந்தைத் திருநகரின்
வெளிய மதியந் தவழுமுடி
விளங்குங் கதிர்ச்செம் பவளமலை
மீது படர்பைங் கொடியினையே. 9

சத்தமாதர்

வேறு

இலகொளி யுமிழ்தரு சிறையோ திமத்தவள்
எழிலுறு தவளவல் விடையூர் திறத்தவள்
எறுழ்வலி மயில்கட வினள்வே றிரிப்பவள்
இருசிறை யொருகலு ழனையேறி நிற்பவள்
உலகதிர் தரவரு மரியே றுகைப்பவள்
உமிழ்கட மழைபொழி யயிரா வதத்தவள்
உழிதரு குழிவிழி யுடல்பேய் நடத்துநள்
உவரெழு மகளிர்த மொளிர்தாள் பழிச்சுதும்
அலகைக ணடமிடு மழலார் களத்தினில்
அமரர்க டபுமுடல் கழிபா னிறக்கலன்
அரவொடு திணிவரை நிகர்தோ ளிடைப்பொலி
அணியென வணிதரு பெருமா னிடத்தமர்
நிலவரி நகையவ ளிருமூ வகைப்படு
நெறிகளு நிறுவிய வொருமா தவக்கொடி
நிலமிசை யுயரிய கமலா கரத்துறை
நிருமலி மலைமக ளனையே புரக்கவே. 10

## முப்பத்துமுக்கோடிதேவர்

### வேறு

சிறகரளி மொய்த்திதழ் கொழுதிமது வைப்பசி
சிதைய மடுத்துக் களித்தாடு தேமலர்
செருகுமள கக்கன மதர்நெடுவி ழிக்கடல்
சிறிது குடித்துக் கறுத்தார மேவிய
திணிமுலைம லைச்சொரி திதலைநிதி யத்திரள்
செழுவிய பொற்புக் கடற்பாய வாரெழில்
செறிதரும டித்திரை யிடையறலொ ழுக்கிய
திறமை நிகர்த்தொத் தொழுக்காமு ரோமமும்
குறைவற வளித்தருள் குவலயம டக்கொடி
குளிர்கெட நச்சிக் கறைப்போர்வை யாலுடல்
கொளுவியதெ னத்திசை முழுவதும டக்கிய
குமரி யிருட்டைப் படச்சாடு மாதவர்
குலவுகிர ணச்சுவை யுணவினையு ணத்தனி
குறுகிய பொற்சக் கரச்சேவல் போலொளிர்
குருமணிகு யிற்றிய புயமலைகு ழைக்கெதிர்
குயமுடி யைச்சற் றெடுத்தேறு பார்வையும்
வெறிகமழு முற்பல நறுமலர்ம றைப்பினில்
விழைத னலத்தைப் படித்தேக நீள்செவி
வியனிலமி றுத்தமை யெணிமறமி குத்தவை
வெருவி விழச்செற் றுகைத்தோடி நீடிய
விரிமலர்த மக்கொரு மறைவிடமெ னப்படும்
விதியெ னெனப்புக்கு விற்காதி னோடமர்
விளையிலிக ரத்துழை சடைவனமு றற்கெழ
விரைவில் விளைத்துக் குதித்தாடு பார்வையும்

இறைமையு மளப்பறு மழகொளிர நிற்பவள்
இமய மலைக்கட் கொடிப்போல மேவிய
இனியமட மைக்குயின் மரகதம யிற்பெடை
இரையு மிருக்குக் குளத்தூரி னடியென்
இருமைவினை முற்றற வெனையுமடி மைக்கொளும்
எழிலமிழ் தச்சத்தி வைப்பான காவலர்
எரிகதிரு ருத்திரர் விறல்வசும ருத்துவர்
எனுமிவர் முப்பத்து முக்கோடி தேவரே. 11

காப்புப்பருவம் முற்றிற்று.

## இரண்டாவது
## செங்கீரைப்பருவம்

பொருவரிய வண்டப் பரப்பைமுழு தாளும்
புராதனர் முகத்துவிழியாப்
போந்துலவு நங்கொழுநர் தம்மைத் தடுத்திடர்
புரிந்தகைக் கமலநமையும்
பருவா லுறுத்துமென் றஞ்சிமென் குமுதமும்
பங்கயமு மொன்றையொன் று
பாதுகாப் பத்துயிலு மென்றர மடந்தையர்
பரிந்துகொண் டாடுசீர்த்தி
இருகைமல ரும்புவி பதித்தொரு முழந்தாள்
இருத்தியொரு தாண்மேனிமிர்த்
திந்த்ரதிரு விற்கிடை தொடுத்தவெண் டரளநிரை
யேய்ப்பநுதல் வேர்பொடிப்பத்
திருமுக நிமிர்த்தொரு குளந்தையமு தாம்பிகை
செங்கீரை யாடியருளே
சிற்சபையி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில்
செங்கீரை யாடியருளே. 1

பொங்கரி பரந்தசிறை வண்டினம் விருந்துணப்
பூங்கமல நாண்முகையெலாம்
போதாக வெழுபரித் தேர்கடாய்க் கடன்முகடு
பூப்பவரு பரிதிப்பிரான்
சங்கின முயிர்த்தவெண் டரளவட மணியுமித்
தாமரை முகிழ்த்துணையும்யான்
தண்டாத மெல்லிதழ் முறுக்குடைத் தல்லாது
தணவலென் றருகுபோந்து

வெங்கதிர்க் கற்றைகள் பரப்பியுல வுதலேய்ப்ப
மின்னுமக ரக்குழைகதிர்
வீங்கிள முலைத்தலை யுமிழ்ந்துதண் புயமீது
விளையாடி நிற்பவதனத்
திங்கண்மிசை யாடக் குளந்தையமு தாம்பிகை
செங்கீரை யாடியருளே
சிற்சபையி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில்
செங்கீரை யாடியருளே.

காரூத்த மறுவுணட வெணகதிாக
கவின்றநின் கமலவதனம்
காண்டோறு மறுவற்ற மதியீ தெனுவுட்
கவன்றுமுன் னிற்கவஞ்சிப்
பார்பூத்த தென்குளத் தூர்ப்பொங்கர் காவணம்
பரியமதி னூழையூடு
பையென நுழைந்தொளித் தோடநிற் பணியவரு
பஙகயச் செல்விமுதலோர்
ஏர்பூத்த வங்கையர விந்தமலர் கூம்பவவர்
இணைவிழிக் குவளையெல்லாம்
இரும்புனற் றேத்துளி பொடித்துமிழ்ந் தலரவரு
ளெனுமமிழ்த தாரைகான்று
சீர்பூத்த முகமதிய மாடவமு தாம்பிகை
செங்கிரை யாடியருளே
சிற்சபையி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில்
செங்கிரை யாடியருளே. 3

மட ரிதுறற தவப்செனப பருமணிப பருமம
வயங்குமடி மீதிருத்தி
மதிக்கடவு டன்மனை யெனக்குலாய்த் தன்னமிழ்
வாக்குவ தெனத்தீம்பயம் [தம்

பணிலத்தின் வாய்க்குமுத மூட்டிமற் றிதுமாசு
பரியாது சாலாதெனப்
பாரிழைத் தொருபொட்டு நுதன்மதிக் கிட்டுப்
பசுங்கழையின் மஞ்ஞைநின்றுங்
கணிபெற்ற புயமே லணைத்திரு மதித்தேவர்
அளவளாய்க் குழீஇயதேய்ப்ப
அழகிய முகத்துமுத் தாடியெழின் மேனசீ
ராட்டமகிழ் கூர்ந்துகொடியேம்
திணிவைத்த நெஞ்சங் கரைக்குமமு தாமபிகை
செங்கீரை யாடியருளே
சிற்சபையி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில்
செங்கீரை யாடியருளே. 4

முக்கனி செறித்தநறு நீர்ப்பந்தர் முல்லைவெண்
முகையனைய மூரலறுகான்
மூசிய விளம்பொங்கர் தேசுறு மலர்ப்பொய்கை
முதலான வறம்யாவையும்
தொக்கமறை யாகம விதிப்படி யியற்றுநாள்
தோலாத கருணைகூர்ந்து
துண்ணென வெழுந்தரு டிருச்சோம நாதனார்
தூமேனி குழைவித்தவை
இக்கரமு மிக்கரமு மித்தனமு மித்தனமும்
என்றுயிர்த் தோழியர்களாய்
ஏத்துமட மாதரார் தம்மைத் தெளித்திடுவ
தேய்ப்பமுக மதியமசையத்
திக்கெட்டு மேத்துங் குளந்தையமு தாம்பிகை
செங்கீரை யாடியருளே
சிற்சபையி னெற்றிவிழி யற்புதனை யாட்டுமயில்
செங்கீரை யாடியருளே. 5

**வேறு**

பொங்கெழி னின்முக மாடுதொ றுங்கமழ்
போதரி நீள்விழிகள்
பொற்செவி யிற்பல காலுமெ திர்ந்து
புகுந்து மறிந்துலவச்
செங்கதிர் நீள்குழை தம்மொடு தாமெதிர்
சென்று மணிக்கலொடும்
செயிரறு பொன்னி னரும்பு பிதிர்ந்து
தெறித்திட மோதுதிறம்
தங்கிளை சார்ந்திடை யாவகை சாற்றமொய்
தாமவ யிற்படையால்
தன்குரு தித்துளி வீழ்தர வீரர்கள்
தமமொடு தாமெதிரா
அங்கை கலந்தம ராடுத லாமென
ஆடுக செங்கீரை
அளந்தறி யாத குளந்தை நிலாவமு
[illegible]

பல்லுயி ருங்களி கூர்கரு ணைக்கடல்
பம்பிவ ளைந்ததெனப்
பாலொளி கான்ற நறும்புனல் சூழ்ந்து
பரந்தொளிர் கமலையிடை
வில்லுமிழ் மின்னுரு வச்சுடர் வேணிவிண்
ணோனைவ டந்தழுவி
வீங்கிள வெமமுலை மார்புழ வங்கையின்
மேதகு தோள்குழையப்
புல்லி யணைப்பது போல்வயி ரங்கள்
பொதிந்தவிர் தொட்டிலினும்
பொன்னணி பாவையொ டாடி யணைத்துப்
பொழுதுக ழித்தருளும்

அல்லிம லர்க்குழல் வல்லி பராபரை
ஆடுக செங்கீரை
அளந்தறி யாத குளந்தை நிலாவமு
தாடுக செங்கீரை. 7

குலத்தில் வளர்த்திடு மன்னையர் செந்துகில்
கூர்மடி மீதிமயக்
குன்றி னரக்கலர் வாழ்க்கை யெனக்களி
கொண்டு குலாவியவர்
கலைப்பொலி முகமதி யுங்குழன் முகிலும்
கண்டென வாய்க்குமுதம்
கதிர்த்த நகைத்தள வலர வரும்பக்
கைக்கம லங்குவியா
முலைக்கம லச்செழு முகையொடு நட்பு
முயங்கிட வாடலுறும்
மூரிவ ளத்துத ரத்திரு வாலெழின்
மொய்த்து மிகத்தழைய
அலக்க ணறச்சுவை யாரமிழ் துண்பவள்
ஆடுக செங்கீரை
அளந்தறி யாத குளந்தை நிலாவமு
தாடுக செங்கீரை. 8

வேறு

வான மெழுங்கரு மேக வினங்கள்
வறந்தீ ரம்போய்வன்
மால்வரை யெங்கணு மோடிட வென்றிமிர்
வண்டூ தும்போது
நான முயங்கிய வாச நறுங்குழல்
நந்தா வந்தீப
நாவி லெழுந்தொளிர் தூம வொழுங்கென
நன்றூர் மென்சாயல்

மேனி நிறந்தரு மேனை யணங்கு
ரா வங்கூர
மீறி வளர்ந்தழ கான குளந்தை
விளங்கா நின்றாறு
தேனிறை கொன்றையி னுனிட நின்றவள்
செங்கோ செங்கீரை
தேவர் தொழுங்கலி யாண சௌந்தரி
செங்கோ செங்கீரை.

கோல நெடும்பனி மாலிம யம்பயில்
கொம்பே செம்பாத
கோகன தந்தொழு வாருள நின்ற
கொழுந்தே பைந்தேனே
ஞால மளந்தவ னுடு மரும்பெறல்
நங்காய் வெங்கோப
நாம விடஞ்செறி காமரு கண்டர்தம்
நண்பே தண்போதோ
டேல மளைந்திருள் கூரு நறுங்குழல்
எந்தா யெம்பாசம
ஈறு படும்படி ஞான மணங்கமழ்
இன்பே யனபாளர்
சீல மிகுங்கம லாகரம் வந்தவள்
செங்கோ செங்கீரை
தேவர் தொழுங்கலி யாண சௌந்தரி
செங்கோ செங்கீரை. 10

செங்கீரைப்பருவம் முற்றிற்று.

மூன்றுவது

## தாலப்பருவம்

---

மதுரங் கொழிக்குங் கொழுந்தேறன்
மடுத்துச் சுரும்ப ரடைகிடக்கும்
மலர்ப்பூந் தடத்தைக் காண்டலுஞ்செம்
மணிகால் குடுமிப் பணியுலகம்
இதுவு மரவந் தனக்கிடமாய்
இருக்குங் கொல்லா மென்றழுக்கா
றெய்தித் தன்கிழப் படத்தாழத்தும
இயல்பை யறிந்தா லெனக்கரைக்கட்
பொதுளி யுறவு கொண்டநறும்
பொதும்பர் நாக ருலகெனுமொப்
புமையாற புலவோர் பதிதாழ்த்திப்
பொற்ரு துதிர்க்குந் திருக்குளந்தைப்
பதியின் மகிழு நறியசுவைப்
பாகே தாலோ தாலேலோ
பணில முயிர்த்த தரளநகைப்
பாவாய் தாலோ தாலேலோ.

இருள்கால் சீத்துச் சோதிவெயில்
எறிக்குஞ் செக்கர் மணித்தொகையின்
இழைக்கும் பசும்பொற் றலத்துயர்த்த
இருங்கே தனத்தின் மிசையுயிர்கட்
கருள்கால் கலைவெண் முழுமதியம்
அமரும் பரிசு தழுறப்பண்
அமைத்த தோணத் தருந்தவஞ்செய்
அறவோர் கடுக்கு மேனிலத்துச்

சுருள்கான் மலர்ப்பூங் கூந்தலிளந்
தோகை யனையார்க் கெதிர்நடிக்கும்
சுரமா மகளிர் விழித்தொழிற்குத்
தோற்றுச் சமழ்க்குந் திருக்குளந்தைப்
பருகா வமிழ்தே பெருங்கருணைப்
பரையே தாலோ தாலேலோ
பணில முயிர்த்த தரளநகைப்
பாவாய் தாலோ தாலேலோ.

மணங்கேழ் வனச மூற்றெடுத்து
மதுவார் பொகுட்டுச் சுருச்சுமந்து
வயி று வருந்திக் கருவுயிர்க்க
வயின்பார்த் துழலும் பெடைஞெண்டைக்
கணங்கே ழுயின்முட் டாட்படுத்துக்
கவைத்தா ளிடையற் றலையூடு
கருவண் டினங்கள் புடைசூழக்
கலந்து முரலத் துவக்குண்டு
சுணங்கேர் முலைப்பெண் ணணங்குநிலைச்
சுமந்து மகளிர் தாலெடுப்பத்
துயலு மணித்தொட் டிலைக்காட்டும்
தொடுநீர் வாவித் திருக்குளந்தைப்
பணங்கே ழரவப் பேரல்குற்
பரையே தாலோ தாலேலோ
பணில முயிர்தத தரளநகைப்
பாவாய் தாலோ தாலேலோ.

கந்தங் கமழு நறுங்களபக்
கலவை யளைந்த முலைக்குவடாங்
கரடக் களிற்றின் மருப்பினிடைக்
கவின்ற வுரோமப் புழைக்கரந்தால்

நொந்தங் கலமந் திறுங்கொடிபோல்
நுணுகித் துவளுஞ் சிற்றிடையார்
நுவலுங் கிளவிக் கிடைந்தகுயில்
நுவலா தடங்கி யவ்விசையின்
சந்தம பலநா ளகம்பயிலத்
தழுவிச் சிலநாள் வாய்விண்டு
சாற்றி யொப்பு நோக்கியொவ்வாத்
தவருற் பின்பும வாயடைக்கும்
பைந்தண் பொழில்சூழ குளந்தைநகர்ப்
பரையே தாலோ தாலேலோ
பணில முயிர்த்த தரளநகைப
பாவாய் தாலோ தாலேலோ.

சுரும்பர் துளைக்க வுவட்டெடுத்துச்
சொரியு மிரதச் செழுங்கரும்பைச்
சுவைத்துக் கதலிக் குலைசாடித்
தூங்குந் தெங்கம் பழஞ்சிதறி
விரிந்த பசுநெட் டிலைக்கமுகின்
மேவிக் ககனத் தருவையதன்
மீது படர்பூங் கொடிவழிபோய்
மிதித்துக் குனித்து விளையாடி
வரிந்த கழையி னெடுங்கயிற்று
வழிபோய் நடிக்கும் பொருநர்திறம்
மானக் குரங்குக் குலங்குதிக்கும
வளஞ்சேர் பொதும்பர் சூழ்குளத்தூர்
பரிந்து தொழுவோர் மனத்துறும்
பாகே தாலோ தாலேலோ
பணில முயிர்த்த தரளநகைப்
பாவாய் தாலோ தாலேலோ.

**வேறு**

சுலவித் தரளப் பவளக் குவைகள்
சுருட்டிக் கரைபுரளும்
துவலைத் திரைமைக் கடனின் றெழுமிரு
சுடர்கண்மு னச்சுடர்தம்
சிலையிற் கவினக் குயிலு முருப்புனல்
தீயைப் புடைபெருகச்
சிந்திப் பனிகூர் பொழுதிற் புனலிற்
சேர்ந்தற மாற்றுநரை
உலறத் தெறுவெப் புடைவே னிற்பொழு
தொள்ளெரி வாய்த்தவநோன்
புழப்ப வரைப்பொரு நொச்சி மதிற்குலம்
ஓங்கு குளந்தையெனும்
தலனிற் பொலிவு பெறப்பயி லுங்கொடி
தாலோ தாலேலோ
தகரக் குழலா யமுதப் பிடியே
தாலோ தாலேலோ. 6

கொங்கு விரிந்த நறுங்க மலங்கள்
கொழிக்கு மதுப்புனலாக்
குவிதர வூழ்த்துதிர் தண்ணிய தாது
குவிக்கு மெருக்குவையாப்
பங்க நிரந்த வயறகண் விளைந்து
பழுத்தெழு நெற்குலைபோய்ப்
பசும்புர வித்திரள் பூட்டிய தேரிற்
பரிதிக் கடவுள்புடைப்
பொங்கொளி வெண்கவ ரித்தொகை வீசுவ
போல வொசிந்தசையும்
பொற்பு மிகுங்கம லாகர மேவிய
பூரணி மெய்யடியார்

தங்கள் பணிக்கென வெம்மை யளித்தவள்
தாலோ தாலேலோ
தகரக் குழலா யமுதப் பிடியே
தாலோ தாலேலோ. 7

பவளக் கொடிபடர் வேலை முகட்டிற்
பாயொளி கான்றெழுசெம்
பரிதி நிகர்ப்பச் செம்மணி மாலை
பரபபிய மைக்குழன்மேல்
திவளக் கதிர்விடு கொண்டை திருத்திச்
செஞுசுடர் வாண்மகரத்
திருவணி யக்கடன் மகர மெனத்தனி
செருகிப் பகைஞருளம்
துவளச் சிலைபடு கணையென நுதலிற்
சுட்டி தரித்தருகிற்
சுடர்பிர தாப மெனப்பொட் டெழுதித்
துன்னிய கீர்த்தியெனத்
தவளப் பணிமூக் கிட்டொளிர் பாவாய்
தாலோ தாலேலோ
தகரக் குழலா யமுதப் பிடியே
தாலோ தாலேலோ. 8

வேறு

பரந்த வெண்புணரி மீதோன்
வேதா மாதேவர்
பணிந்து தொண்டுசெய வேலே
சேலே போலாடும்
கருங்க ணுந்துமளி யீவாய்
பாவாய் தாவாது
கறங்கு வண்டளக மானே
தேனே யேனோர்தம்

புரங்க டந்தநகை வாயார்
தூயார் சேயார்பாற்
புணர்ந்தி டும்பசிய தோகாய்
காவாய் நீகாவென்
றிரஙகு மன்பரக வாழ்வே
தாலோ தாலேலோ
இலங்கு ளந்தைவரு தாளாய்
தாலோ தாலேலோ.

மலங்க டங்குமரு ளூராய்
தாலோ தாலேலோ
மலங்க டங்குமரு ளூராய்
தாலோ தாலேலோ
கலங்க லந்தவரை யேயாய்
தாலோ தாலேலோ
கலங்க லந்தவரை யேயாய்
தாலோ தாலேலோ
புலங்க டந்தபர நாடாய்
தாலோ தாலேலோ
புலங்க டந்தபர நாடாய்
தாலோ தாலேலோ
இலங்கு ளந்தைவரு தாளாய்
தாலோ தாலேலோ
இலங்கு ளந்தைவரு தாளாய்
தாலோ தாலேலோ.

**தாலப்பருவம் முற்றிற்று.**

நான்காவது

## சப்பாணிப்பருவம்

உருப்பொலி மணிப்புனை லுடுக்கைப் புலிக்கொடி
உரத்திற் குலாவுமாக்கள்
உருத்தொன்றை யாற்றினெதிர் பத்தாற்று
முரைக்கிலக் கியமாகவொண் [வோமெனு
குருப்பொலி விரற்செறி செறித்துப்பொலங்தொடிகள்
கொழுவித் தனைப்பரிவினற்
கொண்டாடு மின்றிருத் தாதைகிளை யொன்றைக்
குழைந்துப் பணித்தவிறைவன்
திருப்பொலி கடுக்கைதழை தோட்குவடு பத்தையும்
செழுந்தழும் பாக்குழைத்துத்
திறல்கொண்ட நறுமலர்க் காந்தளங் கைத்தலம்
சேந்தழ கெறிப்பவிமையோர்
தருப்பொலி மலர்த்தொடைக் கூந்தலமு தாம்பிகை
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சுவைகண்ட தெனகுளத் தூரம்மை
சப்பாணி கொட்டியருளே.

உள்ளொளி ததும்பிமேற் பொங்கிப் புறத்தினும்
உவட்டெடுத் துப்பரந்தாங்
கொழுகொளிய வெண்ணீறு மெய்ம்முழுது
துயர்ந்தவடி யார்கள்குழுமி [மட்டித்
வெள்ளொளியி னுனுஞ் சிவத்துதி முழக்கானும்
வேங்கைமக வுக்களித்த
விதிவசமினைந்தின்னும் வேண்டுவார்க்கருளாமை
வேண்டுது மெனுங்கருத்தால்

தெள்ளுநீம் பாற்கடல் வளைந்தெனச் சூழ்போந்து
சேர்ந்தனர் நெருங்குபொதியில்
தெய்வத் திருக்கேள்வ ராட்டினுக் கேற்குந்
திருத்தாள மென்னமலரைத்
தள்ளியெழில்பூத்தநின் செங்கைத்தலங்கொண்டோர்
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை
சப்பாணி கொட்டியருளே. 2

ஐவகைச் சுத்தியு மமைத்துவான் கம்பைநதி
அருகன்பு பூப்பமலரால்
அஞ்சலி நிறைத்துமே னேக்கிமுக மதியினெதிர்
அல்கிய தெனக்குவிந்து
மெய்வகைத் துவாதசாந் தததலத் தானந்த
வெள்ளப் பெருஞ்சோதியை
விரிமலர்த் தவிசாக வேற்றுமுன் போலென்ன
மீண்டுங் குவிந்திழிந்தாங்
குய்வகைச் சிவலிங்க நாப்பணு வாகித்தவ்
வும்பனய னச்சுடரெதிர்
உறக்குவிந் தலர்விரைவு மானமுத் திரைகொடுத்
துலவாது பூசைமுற்றும்
சைவமுறை யாற்றுகைப் பங்கயஞ் சேப்பவொரு
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை
சப்பாணி கொட்டியருளே. 3

கடவுட் பொலம்பூமி காண்டற் கெழுந்தெனக்
கடையுகப் பெருவெள்ளநீர்க்
கடன்மிசை மிதந்திட்ட பூந்தராய் தழையவரு
கௌணியர்கள் குலமணிக்கு

முடவுப் பிறைக்கண்ணி மோலிப் பிரான்சைவ
முறைநெறிச் சோகாப்பவன்
மூடப் புறச்சமய முழுவதுஞ் சோகாப்ப
மூண்டசிலை யோடுபுல்லும்
அடவிக் கவிக்குந் தமிழ்க்குரிசி னீறிட
அமண்கைய ருண்ணீறிட
அருண்மடை திறந்தூற்று திருமுலைப் பால்கறந்
தமிழ்தனா னங்குழைத்துத்
தடவுப்பொன் வள்ளத்து வைத்தூட்டு செங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை
சப்பாணி கொட்டியருளே. 4

திங்கனிக் கிளவியால் யான்றவக் கோட்டிய
செழுங்கழையு முகமூரனீள்
சேயரிக் கண்ணான் மெலித்தவர விந்தமும்
தேங்கமழு நறுமுல்லையும்
பூங்குவளை மலருங் கதிர்த்தபொன் மேனியிற்
போரிட் டொழித்ததளிர்கள்
பொங்கியொளிர் மாழையும் பிண்டியுஞ் சோகாந்து
போதுவன வற்றையணையா
எங்குகட லுலகமுத லெல்லாம் பணித்திடும்
இருஞ்சமர்த் திண்மையுதவி
இடையாத வில்லென் றும்பென் றும் வைத்த
னென்றுநீ யொன்றொன்றைத் [தென்
தாங்கொளி ததும்பிடத் தாக்கியாங் கங்கைகொடு
சப்பாணி கொட்டியருளே
தண்டமிழ்ச் சுவைகண்ட தென்குளத் தூரம்மை
சப்பாணி கொட்டியருளே. 5

தவப்பய னைத்தொழு வார்க்கருள் செய்ய
தடக்கையி னேற்றுபொலந்
தடவுத் தொடியிற் செறியு மணிக்கட்
டத்திப் பாய்ந்திடுநின்
சிவக்கு மரிக்க ணிழுற்று நிழற்றுணை
செவ்விய நவ்விமறிச்
சீர்செய ளைக்கி மகிழ்ந்துற வாடச்
சேர்க்குது மென்றுமனம்
உவப்ப வுவப்ப மறிந்து மறிந்து
முறக்க வவிக்கவவி
உயிர்த்து வளர்த்தருள் கூர்திரு மேனை
உளங்குளி ரச்சுழலும்
குவைக்கவின் மொய்த்த தளிர்க்கையி னம்பிகை
கொட்டுக சப்பாணி
குளந்தை வயங்க வயங்கு மிளங்குயில்
கொட்டுக சப்பாணி.

அரக்கெழில் கொண்டு கனிந்த செழுங்கனி
யாகச் சேயொளியை
அள்ளி யிறைக்கு முருக்கலர் போலமு
கார்த ரத்தினையும்
சுரக்கு நறுஞ்சுவை வானமிழ் தேந்து
சுடர்த்திரு வள்ளமெனத்
தூய மணித்தா ளத்தொடை பூண்டு
துணைத்த தனத்தினையும்
பரக்கு நிறத்தளி ரென்று பசுங்கதிர்
பமபிய மேனியையும
பார்த்துத் துய்த்திட வாயூ றுஞ்சிறு
பச்சை யிளங்கிளிதன்

யை தைவரு மங்கையி னம்பிகை
கொட்டுக சப்பாணி
குளந்தை வயங்க வயங்கு மிளங்குயில்
கொட்டுக சப்பாணி.

முழங்கு மிசைச்சிறை வண்டு விருந்துணு
முண்டக நாண்மலர்கள்
மூரி மணித்தவி சாக வளர்ந்தருண்
மூவிரு செவ்வுருவும்
தழங்கு குளங்கரை யெய்தி யெடுத்தெழில்
தங்கிடு மோருருவாத்
தழுவி முலைக்குவ டார வணைத்தெதிர்
தாங்குத லாற்றகிலா
தழுங்கி விடுத்தொழி கங்கையுள் வெள்கி
அலைந்து விளர்ப்பமுலை
அமிழ்த மருத்தி வளர்த்தருள் கூர்ந்தரு
மைசெய லாற்றியநின்
கொழுங்கவின் மொய்த்த செழுங்கையி னம்பிகை
கொட்டுக சப்பாணி
குளந்தை வயங்க வயங்கு மிளங்குயில்
கொட்டுக சப்பாணி. 8

மதுகர முலவிய துளப வுரத்தினன் மட்டாரும்
மரைமலர் நிலவிய மறைமுனி பொற்றவி சிற்றேவர்
முதுமணி முடிகுனி தரவர சிற்பொலி புத்தேளும்
முதலிய வணிவரு முளரி நிகர்த்த கரத்தால்விண்

நதிதரு புனலொடு தருமலர் நச்சி யிணைத்தாளின்
நவையறு விதிமுறை சொரிதரமிக்ககுளத்தூர்வாழ்
இதமுறு பரசுக வடிவினள் கொட்டுக சப்பாணி
இமகிரி தரவரு முமையவள் கொட்டுக சப்பாணி. 9

அருள்பெறு மடியவர் விழியளி சுற்று மணத்தேனே
அவனியி னிடையற மெவையும் வளர்த்த சுவைப்
திருமல ரமரர்கள் சொரிதரு பத்ம பதத்தாயே [பாகே
தெளிமறைநெறியின ருளமொளிர்வித்தசுகப்பேறே
முருகவிழ் மதுவழி நறுமலர் மொய்த்த குழற்கோதாய்
முனிவரர் மறையவ ரடியர் பழிச்சு குளத்தூரின்
இருமையு முதவிடு மடமயில் கொட்டுக சப்பாணி
இமகிரி தரவரு முமையவள் கொட்டுக சப்பாணி.10

**சப்பாணிப்பருவம் முற்றிற்று.**

ஐந்தாவது

## முத்தப்பருவம்

பகைத்த புரிசை மூன்றுமொரு
பதத்தி னிறுத்துத் திருக்குளந்தைப்
பதியிற் கருணை பூத்தலர்ந்த
பரமா னந்தப் பெருவாழ்வை
நிகர்ப்பச் சிறுவெண் மதிகிடந்த
நெடுவா ணுதன்மேற் போந்துலவி
நெறிக்கும் புருவச் சிலைகோட்டி
நெய்த்துப் பழுத்த கொலைவேல்போல்
வகுத்த மதர்க்கட் சரந்தொடுத்து
மணிமே கலைசூ ழல்குலந்தேர்
வாய்ப்ப வெளிக்கொண் டெமதும்மை
மலச்சோ வழலப் புன்மூரல்
முகிழ்க்குந் தரளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முருகு விரியு நறுங்களப
முலையாய் முத்தந் தருகவே.

வளைத்த கருப்புச் சிலையெடுத்து
வனசக் கணையு மாங்கணையும்
வாசங் கமழு நறுநில
மலர்ப்பூங் கணையு மசோகினிடைத்
தளைத்த நனை தாழ் கொடுங்கணையும்
தழுவிக் கொணர்ந்தென் னெடுந்தொடுத்துச்
சகல புவனங் களும்பணிக்குந்
தண்ணங் குடையெங் குரிசிலைக்கண்

டிளைத்த வெரியாற் படப்பொருத
திருவார் குளந்தைச் சிவவாழ்வைச்
சிந்தை மருட்டிப் பணிப்பலெனத்
திறல்கொண் டெழுந்த தளவம்போன்
முளைத்த முறுவற் செங்கனிவாய
முத்தந் தருக முத்தமே
முருகு விரியு நறுங்களப
முலையாய் முத்தந் தருகவே.

பிதிரும் பொறிப்பொற் சிறைவிரித்துப்
பெருந்தேன் மடுத்துத் தாதளைந்து
பெடையோ டாடிக் களிபூத்துப்
பிறழா வகையின் னிசைபாடி
அதிரும் பலவண் டினமுழக்க
அலரும் பொகுட்டுத் தேங்கமல
அலர்க்குந் தனக்கும பகைமையுற
அமைத்துக் குளத்தா ரமர்ந்தருளிக்
கதிரும் பெருமா னுளக்கமலந்
தனையு மலர்த்தி வயமாக்கிக
கலப்பா னெழுந்தா லெனவதனக்
கலைவாண் மதியி னரும்புநிலா
முதிரும பவளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முருகு விரியு நறுங்களப
முலையாய் முத்தந் தருகவே.

கொழுது வரிவண் டினமுரலாக்
குளிர்பூந் தொடையல முடிசாய்த்துக்
கும்பிட் டிறைஞ்சுங் கடவுளர்தங்
குழாத்தைச் சிறிது மதியாத

பழுது நிலவாத் திருக்குளந்தைப்
பதிவா ழிறையோன் விழிச்சுடரின்
பரிசு நோக்கி மணியிதழ்க்க
பாடஞ் சிறிதே திறந்துருவம்
எழுதும் வினைஞர் தொழிற்கடங்கா
எழிலார் தனதொள் ளொளிகாட்டி
எழுந்தச் சுடரை வயமாக்கி
ஏக்கற் றமையம பார்த்திருப்ப
முழுது மடிமைக் கொளுநகைவாய்
முத்தந் தருக முத்தமே
முருகு விரியு நறுங்களப
முலையாய் முத்தந் தருகவே. 4

இகந்த மனத்தாற் கடல்கடைந்த
இமையோர் வெருவ வெழுங்காளம்
எடுத்துப் பருகுந் திருக்குளந்தை
இறைவன் பவளத் திருவாய்க்கும்
சகந்த னிலைமை தவாதோங்கத்
தாவிக் குதிக்குஞ் சிறுமறிமான்
தழங்கு மருப்பே ரொலிமுழுதுந்
தாங்குஞ் செவிக்கு மருந்தாக
உகந்த வொளிதுன் றியவெயிற்றின்
ஊறு மமிழ்தப் பெருக்காறும்
உரைப்பா ணமிழ்தப் பெருக்காறும்
ஊட்டிக் களிகூர்ந் தெழிற்கடலை
முகந்த பவளச் செங்கனிவாய்
முத்தந் தருக முத்தமே
முருகு விரியு நறுங்களப
முலையாய் முத்தந் தருகவே.

வேறு

அசும்புபட வாய்நீர் வழிந்தோட வோடிவந்
தணையுமைங் கரக்களிற்றை
ஆகத் திடைக்கொண்ட ணுப்பட் டடித்தென
அணைத்தலும் பணைத்துவளர்பொற்
றசும்புதனை யெதிருமிரு களிறெனத் தன்மத்
தகங்கொண்டு தாக்கிமயிரின்
தண்ணிய வொழுக்கினை யணைக்குமொரு கந்தெனத்
தடவுக்கை யாற்சுழியவவ்
விசும்புண்மறை பட்டெழுந் தெண்ணிலா வெணநகை
விரித்தொல்லை மேலெடுத்து
வெகுளிதீர்த் துளங்குழைய முத்தாடி வைத்தாடும்
வியனகர்க் குளந்தைவாழ்வே
பசுமபொனவிர் திருமேனி யழகொளிர நின்றுநின்
பனிவாயின் முத்தமருளே
பங்கயச் செல்விதொழு மங்கையர்க் கரசிநின்
பனிவாயின் முத்தமருளே. 6

சேட்டின மணிச்சோதி நீட்டுமிலை ஞாங்கர்நுதி
தீட்டுநின் றுட்டத்திறல்
தெள்ளிய வருட்பார்வை வெள்ளவமிழ் தர்மைநீ
தேக்கிடவு நீக்கியளகக்
காட்டினைக் காட்டிமையல் பூட்டிளம் பேட்டனக்
கவினடைக் கன்னியரிடைக்
கட்டுண்டு மட்டுண்டு தட்டுண்டு பட்டிறுங்
காளையரின் மாழுநரென
மூட்டியபொன் மாடகத் தியாழுக்கு மிசையூட்டு
மொழியமிழ்த மூட்டவிட்டு
மோட்டிருங் கோட்டுக் குவட்டைமிகர் வட்டமுலை
முத்தையமிழ தெனநேக்கறுாஉம்

பாட்டிசைக் கிள்ளைக்கு மீட்டுமிசை யூட்டுநின்
பனிவாயின் முத்தமருளே
பங்கயச் செல்வி தொழு மங்கையர்க் கரசிநின்
பனிவாயின் முத்தமருளே. 7

மடல்கொண்ட பூந்துழாய்ப் படலைமணி மார்பினன்
மறைக்கிழவ னுதியண்ட
வாணரும் பதைபதைத் தோட்டெடுப் பக்கொடிய
வளைகடற் புளைமீதெழும்
விடமுண்ட சோமேச னுக்கினிய வாயமிழ் தம்
மெல்லலைப் பருகுவித்து
விளியாத வண்ணமென் கொங்கையஞ் சஞ்சீவி
வெற்புங் கொடுத்துமற் றும்
உடனொன்றி மணிமிடற் றுலவா திருத்தலான்
ஒருகணப் பொழுதுமசலா
துருப்பாறி யிற்கலந் தனுதினம் பாதுகாத்
தொண்குளத் தூரின்மருவும்
படமொன்று மரவல்கு லெழிலமுத வல்லிநின்
பனிவாயின் முத்தமருளே
பங்கயச் செல்வி தொழு மங்கையர்க் கரசிநின்
பனிவாயின் முத்தமருளே. 8

சுறவே றியகொடி முதலா கியபடை
சுற்றி வரத்தனிபோய்ச்
சுவைநீள் சிலைகொடு மலரார் பகழி
துரக்கு மதக்கொடுவேள்
இறவே றுதல்விழி வழியூ டழலெழு
வித்த திறற்பெருமான்
எரிபோ லொளிவிடு சடைமா முடியின்
இருக்கு மதிக்கடவுள்

வெறியார் திலகம தணிவா ணுதலெழி
விற்குளம் வட்கிநரு
விரிபூ விதழியை நடுமே னியினிறு
விப்பொரு வக்கருதும்
முறிபோ லுருவினள் கமலா கரமயில்
முத்த மளித்தருளே
முதுநான் மறையறி வறியா வடிவினள்
முத்த மளித்தருளே. 9

பெருகா ரமிழ்தரு ளொளிசேர் மதியெழில்
பெற்ற நுதற்கொடியே
பிறவா வருணெறி தருவா யெனுமவர்
பெட்பி னுளச்சுவையே
மருவார் தகரமு மளிவீழ் மலரு
மணத்த குழற்றிருவே
மதியா தவருள மருவா திருளென
வைத்த மடப்பிடியே
உருகா நெறியெம துளமா சறவு
மொறுக்கு மறக்கடலே
உருவா யளவரு மருவாய் நிறைபொரு
ளுக்கொரு வைப்பிடமே
முருகார் பொழிலணி கமலா கரமயில்
முத்த மளித்தருளே
முதுநான் மறையறி வறியா வடிவினள்
முத்த மளித்தருளே. 10

முத்தப்பருவம் முற்றிற்று.

ஆருவது

## வாராணைப்பருவம்

வெள்ளித் தகட்டையரில் கொள்ளத் துறுத்தனைய
வெள்ளிய சிறைப்பவளவாய்
வெள்ளோதிமத்திரள்கள் செஞ்சிலம் பொலியினையு
மென்மடப் பிடியிலாத்தை
எள்ளிக் கவின்கொண்ட திருநடைப் பொலிவினையும்
எய்யாது கற்கவெண்ணி
இகபரப் பெருவாழ்வு வேட்டவர்க் கட
இணையடிக் கமலமலரை
உள்ளித் தொடர்ந்துசூழ் மொய்த்திடுஞ் சூழலிடை
யுற்றுநீ யச்சூழலி
ஞெடும்பெயர்ந் தவிர்மதிய மூர்ந்துவர லேய்ப்ப
மாமணிக ளிருகரையினும் [வெளி
அள்ளிச் சொரிந்துலவு பாலிநா டாளவரும்
அமுதாம்பி கைவருகவே
அருண்மடை திறந்தூற்று புன்மூர லழகொளிர
அம்பொனு யகிவருகவே. 1

துளிபட்ட தேந்தொடைக் கூந்தலைக் காரென்று
தோகைமுன் னுடிவரமென்
துணைமலர்ப் பாதநடை கற்கவன் னத்திரள்
தொடர்ந்துபின் னோடிவரவுட்
களிபட்ட தீங்கிளவி கற்குநின் செந்தளிர்க்
கைக்கிள்ளை பாடிவரநின்
கருணைபொழி கட்கடைப் பார்வையை வியந்துமான்
கன்றினங் கூடிவரமெய்

ஒளிபட்ட வேதக் குழாங்கதறி யோலிட்
டுனைப்பெரிது நேடிவரவில்
உமிழ்மணிக் கோவைக் குரூஉப்பரும மீமிசை
உடுத்தவிடை வாடிவரமை
அளிபட்ட பூஞ்சோலை சூழ்குளத் தூரில்வரும்
அமுதாம்பி கைவருகவே
அருண்மடை திறந்தூற்று புன்மூர லழுகொளிர
அம்பொனு யகிவருகவே. 2

வில்லுமிழ் குரூஉமணிச் சுடிகைப் பணிக்குழாம்
விரித்தபை நெரித்துருத்து
வீசுங் கலாபப் பசுந்தோகை யீட்டங்கண்
மெல்லியலு நடையுமவேட்டு
வல்லுறழ் மணிக்கோவை தாழ்ந்தமென் கொங்கைநின்
மருங்குறச் சூழ்ந்துவரவவ்
வளரிளஞ் சாயலா னடையினுன் வேறறிய
மாட்டாது மருளுமெம்மை
எல்லொளித் தண்ணிலா நகைகொண்டு தேற்றிமற்
றிருக்காதி யானநானகும
இன்னங் கிடந்துமுறை யிடுமறி வரியநின்
இயல்பினைக் காட்டியருளி
அல்லுமிழ் தடமபொங்கர் சூழகுளத் தூரில்வரும்
அமுதாமபி கைவருகவே
அருண்மடை திறந்தூற்று புன்மூர லழுகொளிர
அமபொனு யகிவருகவே. 3

வயிரா வணங்தொறு மெழுங்குளத் தூர்வந்து
வானகோடி ரண்டாயிரம்
வாய்த்ததனை யாளும் பிரானைமரு மத்திரு
மருப்பினு லாளாண்மையும்

செயிரா வணங்கினைப் பல்லுயிரு மெய்தத்
தெறூஉமலக் களிறெறந்தையும்
திக்கெட்டு மண்டப் பரப்பும் கடந்திறச்
செற்றிடும் விழிவீரமும்
பயிரா வணஞ்சொரியு மேகத்தி னருள்கூர்ந்த
பதமடையு நோக்கியஞ்சிப்
பலிமா லடுக்கலெனு நுந்தைதனி னுரிமையாற்
பரிந்துபின் வருதலேய்ப்ப
அயிரா வணம்பின்பு தொடரத் தொடைக்கூந்தல்
அமுதாம்பி கைவருகவே
அருண்மடை திறந்தூற்று புன்மூர லழகொளிர
அம்பொனு யகிவருகவே. 4

விந்தையங் கிரிதவக் கிகலியுள் ளதுமுற்றும்
விந்தவீ றின்மையுந்தண்
வெள்ளிவே தண்டமொ ரரக்கன் பெயர்த்திட்ட
மென்மையுங் ககனமீறும்
மந்தர முதற்கிரி யிடைக்கட் பொலிந்தண்ட
மார்க்கத் திரண்டுசுடரும்
வலமாய் வரப்புவிக் காதார மானதன்
வன்மையையு நோக்கிநோக்கிச்
சிந்தைகளி கூருமா மேருவைச் சிவபிரான்
செங்கமல வங்கைபத்துஞ்
சேர்ந்து நித்தலுமுழக் கத்தளர்ந் தொசியாது
செம்மாந்து விம்மியெள்ளும்
அந்தனச் சிகரிமிசை யருவிநித் திலமிட்ட
அமுதாம்பி கைவருகவே
அருண்மடை திறந்தூற்று புன்மூர லழகொளிர
அம்பொனு யகிவருகவே. 5

தெய்வச் சுருதி தமிழ்க்கன்றித்
தீட்டா நிலைமைத் தெனவுலகில்
தெரிக்குங் காழித் திருஞானச்
செம்மற் குழவிக் கருண்ஞானம்
பெய்து குழைக்க வோமுலையாம்
பெரிய மலைவா யுறுத்துமென்றே
பெருமான் றனையுங் குழைத்தவலிப்
பெற்றி யறிந்து தடுத்தோபூங்
கையி லிலகு நகக்குறிபற்
கதுவ னோமென் றேதீம்பால்
கறந்து கொடுத்தா யெனச்சகிமார்
கனிந்து பாட நகைமுகிழ்க்கும்
வைவைத் தமைத்த மதர்வேற்கண்
வாழ்வே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத
வல்லி வருக வருகவே.

குஞ்சி யசைய வசைந்துவருங்
குமரப் பெருமான் றனையேந்துங்
குளிர்பூங் கரத்துத் தொடிகறங்கக்
கொடிபோ லொசியுஞ் சிறுமருங்குல்
அஞ்சி நுடங்க வம்மருங்குல்
அணிந்த பருமங் கதிர
அணங்கு மிடைகண் டிரங்குவபோல்
அவிரு மணிநூ புரமொலிப்பப்

பஞ்சி திருத்துஞ் சிறடிகள்
பதிந்த சுவடு தொறுமிமையோர்
பனிகாண் மோலி நிரைபுரளப்
பதுமை முதலோர் களிதூங்க
மஞ்சி வரும்பூங் குழுற்கற்றை
மாதே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத
வல்லி வருக வருகவே. 7

கடிகொண் டலரு நறுங்கடுக்கைக்
கடவுண் மகிழுப் பேரண்ட
கடாகப் பரப்பே சிற்றிலெனக்
கருமப் பகுப்பே சிறுசோறும்
படிகொண் டுயிராம் பாவைகட்குப்
பைதன் மலநோய்ப் பசியிரியப்
பல்கா லயிற்றி விளையாடிப்
பரமா னந்தப் பெருவீட்டிற்
குடிகொண் டிருக்குந் தீங்கரும்பே
கொள்ளத் தெவிட்டாச் சுவையமுதே
குன்றம் பயந்த நறுங்கனியே
கொழிக்குங் கருணைப் பெருக்காறே
மடிகொண் டயரா தெமைப்புரக்கும்
வாழ்வே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத
வல்லி வருக வருகவே. 8

தீது விளைக்குங் களப்பணியுந்
தேவர் குரவன் மனைச்செல்வி
திருக்கற் பழித்த களப்பணியுந்
இணைத்துக் கலவி செயப்புகுங்கால்

கோது விளக்கும் பேரச்சக்
குணமு நாணுங் கொடுக்குமெனக்
குறியேம் நினது சாயலுமின்
கொழிக்குங் காஞ்சி யல்குலுமே
போது விளக்குஞ் சடைக்காட்டிற்
புகுந்து வெளிக்கொ ளாதொளிக்கப்
பொலிவு தருமா லெனச்சகிமார்
புகலச் சற்றே நகைத்தளிகள்
வாது விளக்கு முடிசாய்க்கு
மாதே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப் பதியமுத
வல்லி வருக வருகவே. 9

அயில்கண் டனையஞ் சலித்தேத்தும்
அன்னை வருக பெருங்கருணை
ஆழி வருக தீவினையேம்
ஆவித் துணையே வருகவிடந்
துயில்கண் டனையம் பலத்தாட்டுஞ்
சுடர்பொற் கொடியே வருகவிளஞ்
சுகமே வருக நறுங்குதலை
தோற்றுங கிளவி யெனுமதுரம்
பயில்கண் டனையர் செவிக்கூட்டும்
பசுங்கோ கிலமே வருகவென்றும்
பருகத் தெவிட்டாச் சுவையமுதப்
ப்ாவாய் வருக பசுந்தோகை
மயில்கண் டனைய விளஞ்சாயன்
மாதே வருக வருகவே
வளங்கூர் குளந்தைப பதியமுத
வல்லி வருக வருகவே. 10

வருகைப்பருவம் முற்றிற்று.

ஏழாவது

## அம்புலிப்பருவம்

பொன்பூத் தலர்ந்தவம் மரவங்கண் மாலரி
பொருங்களிற் றிலமணாவிப்
பொங்குமலை வாய்வருங் காரணத் தாற்செய்ய
பொன்னலஞ் சிலம்படியினின்
மின்பூத்து நாளும் புலம்புறச் சூழ்தலான்
மிடையுமங் கமலமயர
மிக்குறுங் குவலயம டங்கலுங் களிதூங்க
விரியொளிக் கதிர்வீசலால்
கொன்பூத்த பெருமானை யணைதலால் வேளெனுங்
குழகற்கு மகிழ்செய்தலால்
கோமளப் பெண்செய்கை நின்செய்கை போலுமால்
கூர்ந்துணரி னிவளையன்றி
அன்பூற் றெடுப்பவினை யாடுதுணை வேறில்லை
அம்புலீ யாடவாவே
அழகுவள ருங்குளத் தாரமுத வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. 1

மண்டலம் புகழாத வன்படுஞ் செவ்வியின்
மாண்டவரை யுச்சிமீது
வயங்கிய கரஞ்சேர்த்தி யாணவ விருட்குழா
மாற்றிநற் பசுமென்பயிர்
கண்டக மகிழ்ந்துநெடு வானுற விளைந்தொளி
கலந்தமணி கான்றகதிர்நீள்
கடிநாறு தன்னடி வணங்கவெளி வந்துதெண்
கடலுலக முற்றுமேத்த

விண்டல நெருங்குமீன் கணமாதர் புடைசூழ
மேவியுல கந்தனதியல்
வீறுபெற நோக்கினு லீரெண் கலைப்பொலிவு
மெய்ம்மையிற் காட்டுமுறையால்
அண்டர்தொழு மெம்மையா ளம்மையை நிகர்ப்பைநீ
அம்புலீ யாடவாவே
அழகுவள ருங்குளத் தாரமுத வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. 2

கங்கையும் பாந்தளுந் தும்பையுஞ் செம்பொற்
கடுக்கைச் செழுந்தொடையலுங்
கபாலமுங் கொக்கிறகு மேற்றிருந் தொழுகுதேங்
கமழ்ந்தபூ மத்தமுமறுங்
கொங்குதவ மாத்தியும் வன்னியு மெருக்குங்
குளிர்ந்தவறு கம்புல்லுமேற்
கோமளப் புலவோ ரிறைக்குமந் தாரமுங்
கொய்துதவர் தூற்றுமலரும்
தங்கிய பிரான்சடைக் காட்டினி லுனக்குரிமை
சறறலால் வேறுமுண்டோ
தாவிலெண் ணுன்கவய வத்தினுஞ் செம்பாதி
தனதெனக் கொண்டுவாழும்
அங்கவ ணினக்கதிக மென்பதற் கையமிலை
அம்புலீ யாடவாவே
அழகுவள ருங்குளத் தாரமுத வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. 3

உருநிறை யுவாத்தோறும வாக்குநின் னமிழ்துண்ட
உம்பர்த் தலத்தினிமையோர்
உவாக்கட லுயிர்த்தவிட முன்னிற்றலாற்றற்கும்
ஒல்கினர்கள் சாவாதிரார்

குருநிறை மணிக்கச் சுணிந்தவிவள் பவளவாய்க்
கொழியமுதம் வாய்மடுத்த
கோமளச் சோமேசர் விடமயின் ருற்றலுங்
கொண்டனா ரிறத்தலிலர்மற்
றிருணிறை யிராவினை விளைத்திபிவ ளுண்ணிறையும
இருளிரா வினைமுழுவதும்
இரித்திடுவ ளாதலா லிவளொடும் பொன்னே
டிருப்பணையை மன்றவரிபாய்
அருணிறை கடைக்கண்வைத் தெம்மையா ளம்மை
அம்புலீ யாடவாவே [யுடன்
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. 4

தெளிக்குமெய் யன்பினுல் வழிபட்ட நாளுனது
செல்லனோய் தவிர்த்தளித்த
திருச்சோம நாதனு ருண்டருளு நஞ்சும
சினந்தவிர்ந் துள்ளொடுங்கத்
துளிக்குமெழி லங்கைத் தலத்திற் றடுத்திட்ட
சுவையமிழ் திருப்பவமிழ்தம
துணைக்கரத் தேந்திப் பசிப்பிணி தெறத்தினந்
துயருழந் துழல்வோரெனக்
களிக்குமுறை தேற்றுது வாளரா வுண்டுண்டு
கக்கத் திகைத்துவெருவிக்
ககனவெளி யோடியும் வடகுவடு சுற்றியுங்
கவலுநின் செய்கைநன்றே
அளிக்குல மிரைக்குங் கடிக்குழற் கன்னியுடன்
அம்புலீ யாடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. 5

வணங்குமுறை யாற்றனது திருவுளப் படிநிற்கு
மாந்தர்க்கு மலதிரோத
மாயேய காமிய மருட்பிணி யவிழ்த்துநான்
மறைமுடிவு மெட்டாததோர்
குணங்குறி கடந்தபே ரானந்த வெள்ளக்
கொழுங்கட றிளைத்தாடிடக்
கொடுத்தருளும் வள்ளன்மை நிற்கமற் றுலகினுங்
குளிர்தூங்க வெண்ணுன்கறம்
இணங்குவே தாகம வழித்துறை வழாவகை
இயற்றியது காணுயலை
ஈங்குநீ வரினினது கறைபோக்கி வேண்டியதும்
ஈந்தருள் கொழித்தருளுவாள்
அணங்குகொண் டந்தரத் தலையாதெ மம்மையுடன்
அம்புலீ யாடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. 6

குடங்கைமல ராற்செம்பொன் மேருவைத் தனுவெனக்
கோட்டிய மலைக்குமருகன்
கோமளச் சிலைமார்பு மைந்தனை யிரட்டித்த
குவவுப் புயக்குவடுமேல்
வடங்கதுவு மோட்டிளங் கோங்கினும் வண்டினும்
மலங்கக் குழைத்தவணினை
வருகென் றழைத்திடவு மதியா திருத்தியிவள்
வன்கதக் கனலிதோய்ந்த
தடங்கட் கொடுமபடைச் செய்யசுடர் வேல்கொண்டு
தாக்கினுயிர் பொன்றிவிடுதல்
சரதமற் றெங்கெங் கொளிப்புறினு மிவளிலாத்
தானமொன் றில்லைகண்டாய்

அடங்கிய தடங்கமல நெஞ்சா தனத்திருவொ
டம்புலீ யாடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. 7

துடிபட்ட கைத்தலத் தொம்பிரான் மகிழ்தருஞ்
சுந்தரப் பெண்ணமிழ்தெனத்
தோன்றும் பிராட்டியைமு னெண்ணுத தக்கனூர்
துயர்கூர்ந்து பட்டபாட்டை
முடிபட்ட வானவர் குழாத்தோடு முடனின்று
முழுவதும் பட்டறிதியிம
மொய்குழற் செல்விதனை யவமதித் தின்றுநீ
முன்னுரு தகன்றொழிவையேற்
கடிபட்ட விதழ்தின் று கறுவிஞ னின்னிலைமை
கடிபட்டு மாழ்குவையலாற்
கலைமுழு மதித்தே வெனும்பழைய பெயரொடுங்
கலைமதி யிலாதததேவென்
றடிபட்ட பாவிற் புதுப்பெயரு மாளுவாய்
அம்புலீ யாடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. 8

சங்கையா மங்கையிவ ளெம்பிரான் புலவியில்
தடங்கருங் கட்கடைநுதி
சற்றேற கறுப்புழித் தாமரைச் சீறடிகள்
தாக்குங் கடுந்தொழிறல்
கங்கையா டித்துடித் திவள்கருணை யாற்றினைக்
கைகூப்பு மிறையேந்துமான்
கதறிவிழி மானைத் தொழுந்தொடையல் வண்டெ
கருங்குழற் குவமரவம் [லாங்

மங்கையா டாதலைப் பார்த்தனைக் காவென்று
வாவுமற் றுங்குநீயும்
வாணுதண மதிக்கிறைஞ் சிடுவையன் றேயதனை
மதியாத தென்னைகொலெமக்
கங்கையா மலகமென வன்புகூ ரம்மையுடன்
அம்புலீ யாடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. 9

கைப்போது நீட்டிமுன் விரித்துனை யழைப்பவுங்
காணுதி போல்வந்திலாக்
காரணத் தாலம்மை சீறுதலு மங்கையைக்
கரும்பார்ந்த ளென்றஞ்சினன்
இப்போது தாழக்கலான் வருவனென் றிதுகாறும்
இவ்வாறு தப்புவித்தோம்
இன்னுநீ வாராது மத்தரிற் றிரிதியேல்
இனியுனக் கேதுபுகலோ
செப்போது கொங்கைப் பிராட்டியிவள் சோமேசர்
செங்கண் புதைத்தஞான்று
தினகரச் செல்வனொ டழுங்கித் திகைத்தநின்
திறமறந் தனைபோலுமால்
அப்போது பட்டதை நினைந்துமற் றிவளுடன்
அம்புலீ யாடவாவே
அழகுவள ருங்குளத் தூரமுத வல்லியுடன்
அம்புலீ யாடவாவே. 10

அம்புலிப்பருவம் முற்றிற்று.

எட்டாவது

## அம்மானைப்பருவம்

வம்பிய ருடைக்கூந்தன மீமிசைக் கதிர்வீச
வாள்பட்ட கோற்றொடிக்கை
மலரிணைக் கண்டுசில வண்டத்து மதியங்கள்
வனசமி தெனுங்கருத்தால்
பம்பியட ரிருள்கண்டு முகிழாமை யாற்றமைப்
பரிசித்தல் வேட்டதாகப்
பாவித் துறுந்தொறுந் தன்றுணைமை யன்மை
பங்கயம் விதிர்த்துவெருளா [யாற்
வெம்பியகல் வானத் தெழுந்தோ டிடத்தள்ளி
விடலெனச் செங்கைகளால்
வேலினை யிகந்தொருவி வார்தரு கொடும்புருவ
வில்லொடு கிடந்துமிளிரும
அம்பிய றடங்கணொளி கொண்டுலவு மித்திலத்
தம்மானை யாடியருளே
ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை யாடியருளே. 1

இருள்பூத்த நெறிசுரி கருங்குழ லரம்பையர்கள்
எண்ணிலார் கவரிவீச
எறிசுடர் மணித்தவிசு வீற்றிருந் தரசுபுரி
யேந்தல்குல வரைகளோடும்
தெருள்பூத்த நுங்கைசிற கீர்த்தமை குறித்துச்
செயிர்த்தவனை யண்டமுகடும்
தெறிபடக் கைக்கொண் டெறிந்தோச்சி மீளத்
திகைத்துவீழ் தோறுமுன்றன்

மருள்பூத்த வெகுளிதணி யாமையாற் பின்னரும்
வன்கண்மை கொண்டோச்சல்போன்
மருங்குசூழ் தோழியர் தமிணைவிழியி னீழலை
மரீஇச்சுலவி யோடியாட
அருள்பூத்த கைகளா லொளிபூத்த மரகதத்
தம்மானை யாடியருளே
ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை யாடியருளே. 2

ஒழுங்குபடு மண்டகோ டிகடொறு நிலாவுறாஉ
மொண்கமல மாநிதிகளும்
ஒலிகொண்ட வெண்சங்க நிதிகளுஞ் சார்ந்தவர்க்
குதவுநின் கரநோக்கிவான்
செழுங்கதியு முய்த்தளித் திடுநிதிய மீதெனத்
தேர்ந்துவந் தளவளாவித்
திருவாய்ந்து விடைகொண்டு தம்பதி குறித்து
சேண்வழி நடத்தலேயப்பக் [மேற்
கொழுங்கதிர் பரப்பிக் கவின்றசெம் மணியாற்
குயிற்றுமம மனைகளபலவும்
குளிர்நிலாக் கான்றுவெள் ளொளிவீசு முத்தாற்
கொழிக்குமம மனைகள்பலவும்
அழுங்குமணி மேகலைச் சிற்றிடை யெடுத்தெடுத்
தம்மானை யாடியருளே
ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை யாடியருளே. 3

தேங்கலுழி யூற்றெடுத் தோடும்ம் போருகச்
செல்வமட வாரிருவரும்
திங்களைக் கண்டினி யிருக்கிலெ மைமைநந் தவிசு
சிறைசெயு மெனக்கவன்று

பூங்கமலம் விட்டொரீஇத் தஙகொழுநர் பதியுறப்
போமிடைத் திரும்பிநோக்கிப்
புகழ்ந்திவை மதிக்குமுன் முகிழாமை தேர்ந்துளம்
பூரித்து வருவதேய்ப்பத்
தோங்கனியு மும்மலத் துகளீர்க்கு நின்முகம்
சுடர்பூப்ப வங்கையேந்தித்
துரிசற்ற பவளத் திழைத்தன வு நித்திலத்
தொகையிற் குயிற்றியனவும்
ஆங்கமணி வால்வளை தழங்கிட வெடுத்தெடுத்
தம்மானை யாடியருளே
ஆரண முழுக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை யாடியருளே. 4

புத்தமிழ் துருத்துமணி மோலியங் கடவுளர்
புரைப்பபிப் பிணிதவிர்த்துப்
பூதல மருங்கினும் பைங்கூழ்த் தொகுப்பெலாம்
பூரிப்ப மாந்தர்முகனும்
சித்தமு மலர்ந்துகளி கூரச் செழுங்கலைத்
திங்கதிர் பரப்பியுலவும்
திங்கட் பிரான்செந் துவர்க்கொடி படர்ந்தவெண்
டிரைமுகட் டெழுகாலையும்
தத்தலை விரிக்குங் குடாதுகட லுட்புகும்
சமயத்தினுஞ் சேத்தல்போல்
தடங்கையி லெடுத்தெறியு மேல்வையினு மற்றது
தடங்கையிற் புகுபோழ்தினும்
அத்தமுமிழ் சேயொளி கவர்ந்தொளிரு நித்திலத்
தம்மானை யாடியருளே
ஆரண முழுக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை யாடியருளே. 5

மருள்கான்ற நெஞ்சச் சழக்கைத் தடிந்தின்ப
வான்கதி கொடுக்குநின்கை
வயங்குபொற் கடகத் திருங்கவின் முகந்துமலர்
வள்ளலை நிகர்த்துவிழியின்
இருள்கான்ற நீலங் கவர்ந்தராப் பாயலிடை
ஏந்தலை நிகர்த்துநுதலின்
இட்டசிந் துரவெழில் கவர்ந்துநின் கொண்கரை
இணைந்துமேற் போந்துலாவித்
தெருள்கான் றெவற்றினுந் தோய்வற்று நின்றவச்
சிற்பரம் பொருளையொத்துச்
சேணுடர் கொண்டாட வாடச் செழுங்கருணை
தேக்கிநிறை சோமேசனார்
அருள்கான்ற கண்களி பயப்பமணி நித்திலத்
தம்மானை யாடியருளே
ஆரண முழக்குகம லாகர புரத்தலைவி
அம்மானை யாடியருளே. 6

## வேறு

முத்த மிழைத்தன வும்பவ ளத்திரள்
மொய்த்தன வுங்கலைகள்
முற்று நிறைந்த பசுங்கிர ணச்செழு
முழுமதி யாமெனவும்
எத்திசை யுங்கதிர் கானறிருள சீத்தெழு
மெனறூ ழாமெனவும்
எண்ணி யுணற்கெழு மூன்று ளராவும்
இருஞ்சிறை நேமியுநின்
உத்தி முலைக்கு மிடைக்கு மிடைந்தய
லோடவும் வெம்பசியால்
உயங்கு சகோர மயங்கி யுடன்றிரி
வுற்று வருந்தவுமென்

அத்த னுளத்தி னடிக்கு மடப்பிடி
ஆடுக வம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவள்
ஆடுக வம்மனையே.

வடங்கெழு கொங்கை நிகர்ப்ப வளர்ந்த
வடாது பொருப்பினைநின்
மகிழ்நர் கரத்தினி லின்னும் வளைத்திடு
மாறொரு சூழ்ச்சிநினைந்
துடங்கழி மூன்று புரங்களை மீண்டும்
உலாவ வெழுப்பிவரம
உதவி வெளிக்கண் விடுத்தல் கடுத்திட
ஒள்ளொளி முத்தினுமோர்
முடங்க லுருத்தொளிர் நீல மயத்தினு
மொய்த்த பசும்பொனினும
முற்ற வமைத்து விடுத்தரு ளம்மனை
மூன்றும்விண் மீதுலவ
அடங்கிய வன்ப ருளங்குடி கொண்டவள்
ஆடுக வம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவள்
ஆடுக வம்மனையே.

உய்ய வரந்தரு நித்தன் முகத்தில்
உயங்கு முயலந்தகையும்
முன்கர மின்னு மொறுத்த லுருதுற
வாடி நயப்பமெனு
வெய்ய நெருப்பொழு செங்கதி ருங்குளிர்
விசு பனிக்கதிரும்
மேவி யகங்கையி னேடுறு கேண்மை
விளைத்துவின் னேகுதல்போல்

செய்ய மணிப்பவ ளத்தி னிழைத்த
செழுந்திர ளம்மனையும்
தெள்ளிய முத்தி னிழைத்த கதிர்க்குவை
சிந்திய வம்மனையும்
ஐய நுசுப்பொசி யத்தளி ரங்கையின்
ஆடுக வம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவள்
ஆடுக வம்மனையே. 9

கதிருமிழ் நீல மணித்திரண் மொய்த்த
கருஞ்சுட ரம்மனைநின்
கட்படை யாலடி யார்மல மோடல்
கடுப்ப வெழுந்துலவ
முதிரொளி துற்ற செழும்பவ ளத்திரள்
முற்றிய வம்மனையும்
மும்மலம் வென்ற திறற்பிர தாப
முளைத்தெழ லொத்தெழவெண்
மதிநிகர் முத்த நிரைத்து வனைந்தவம்
மானை யதன்பிறகே
வயங்கிய கீர்த்தி திரண்டெழு கின்றது
மான வெழுந்துலவ
அதிர்வளை யங்கையி னுலமு தாம்பிகை
ஆடுக வம்மனையே
அரந்தை துரந்து குளந்தை புரந்தவள்
ஆடுக வம்மனையே. 10

அம்மானைப்பருவம் முற்றிற்று.

ஒன்பதாவது

# நீராடற்பருவம்

தேங்கிய செழுங்கலைத் திங்களுக் கருள்செய்த
செல்வர்முடி மீதுதானும
திளைந்தாடு முரிமையாற் றிளைத்தாடு வோர்க்
இப்பிணிப் பவந்தெறுதலால் [கெலாம்
ஓங்கிய கலித்திரைக் கங்கையொன் றேநம்மை
ஒத்ததா மென்றதனொடும
உறவாடல் வேட்டெழுந் தாலென்ன விண்ணத்
துயர்ந்துடுக் கூட்டமலைமேல்
தாங்கிய கிளைக்குலங் கான்றுமணி யைத்தமது
சாதியென வோகைகூரத்
தண்கதிர்க் கடவுளொடு செங்கதிரை யண்டத்
தடஞ்சுவர்ப் பிடரினெற்றி
வீங்கிய வொலிக்கூட்ட மீன்றுவரு பாலிநதி
வெள்ளநீ ராடியருளே
வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரமமை
வெள்ளநீ ராடியருளே. 1

இருகவு ளுடைந்தூற் றுபூங்கடாங் கமழ்முகத்
தெறும்வலிக் குழூஉக்களிறெலாம்
எழிலிக் குழாத்திற் பெயர்ந்துழி தருஞ்சிகரி
யிடமாதி நான்குமாற்றத்
தருவளை யடங்கத் தழீஇக்கொண்டு பின்னவை
தளர்ந்துகலி கூராவகை
சாலவெதி ரொன்றுக் கனந்தமாப் பெருவளன்
தண்டா தளித்துவரிசூழ்

அருநிலை னிடத்தொருவர் நினையளவை யாற்றிடினும்
அருளினிலை பெறுவாழ்க்கையோ
டழியாத திருவுமெதி ராங்கவர்க் குதவுநின்
அடியவரை யொத்துமாக்கள்
வெருவியய லோடத் தழங்கிவரு பாலிநதி
வெள்ளநீ ராடியருளே
வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை
வெள்ளநீ ராடியருளே. 2

வளைத்தமுப் புரிசைத் தலத்தினின் றயில்கொண்ட
வாளிக்குழா மெழுதல்போல்
வயங்கிய பசும்பொற் றிரட்குவட் டிணையும்வல
வாளரித் திரளையுநெடுந்
துளைத்தகை முகக்கடாக் குஞ்சரத்
சுழிக்குமச் சுழிமூன் றினும்
துண்ணென வெழுந்தநெட் டுடல்வாளை தெய்வத்
துறைப்புனற கங்கைநதியில்
திளைத்ததிற நோக்குவார்க் கிப்புனல் படிந்தாடு
செய்தவப் பயனையிந்தத்
திண்பூத பரிணம தேகத்தி லுதவுமா
தீர்த்தமிது வெனவியப்பு
விளைத்துவிண் ணுடும பழிசசவரு பாலிநதி
வெள்ளநீ ராடியருளே
வெறிநறுச் சோலைசூழ தென்குளத் தூரம்மை
வெள்ளநீ ராடியருளே. 3

திரைத்தொலி பரப்பியலை வீசும் பெருங்கடற
றீம்பயம் பருகியார்த்துச்
செல்லின மெழுந்துநெடு வான்படர்த லுந்தவாது
தீர்த்தம் படிந்தாடுநர்

புரைத்தொகை விளக்குமல மாயைகன் மக்குழாம்
பொள்ளென விரிந்தோடலும்
புரையக் கருங்குழற் காட்டுமலர் கூடும்
பொலஞ்சிறைத் தும்பிமுழுதும
இரைத்துமணி வானத் தெழுந்தோட நீராடும்
ஏந்திளங் கொங்கைமடவார்
ஏறிட்ட மணியணிகள் சிந்திய கரைக்கணின
இணையடி வருந்தாவகை
விரைத்துணர் நிரம்பப பரப்பிவரு பாலிநதி
வெள்ளநீ ராடியருளே
வெறிநறுஞ் சோலைசூழ் தென்குளத் தூரம்மை
வெள்ளநீ ராடியருளே. 4

கொழுந்தாம மாடவது சுற் றுங் குழற்கற்றை
கூட்டுவிட் டாடவதனிற்
குடிகொண்ட மாதர்ச் சுருப்பின முகேரெனக்
குரல்விளைத் தாடவதுசூழ்
செழுந்தா துகுங்கஞ்ச வெள்ளனந் திரையூடு
சேர்ந்தாட வதனருகுநின்
திருமேனி கண்டின மௌனப்பிணி முகக்குலம்
சிறைவிரித் தாடவதுபோல்
எழுந்தாடு தெய்வப் பிணக்குழாங் கண்டுகண்
டின்பநீ ராடவவர்தோள்
இணங்கும் பெரும்புலவர் கைகொட்டி யாடவெள்
ளீர்ம்புனற் கங்கைபுவிமேல்
விழுந்தாங் கொழுங்குகொண் டாடிவரு பாலிநதி
வெள்ளநீ ராடியருளே
வெறிநறுச் சோலைசூழ் தென்குளத் தூரம்மை
வெள்ளநீ ராடியருளே. 5

ஏந்து பிறைவெண் மருப்புரற்கால்
எழில்கூர் மலைவா ரணத்திரள்கள்
எய்திப் பரவை கலக்குமலை
யேய்ப்பத் துளைந்து விளையாடி
நீந்தி யணைந்து கரையேறி
நிறையுங் களிப்பு மீக்கொண்டு
நிலாவெண் டரளக் குவைபெயர்த்து
நீள்வா ரிதியின் கரைக்கணலை
மாந்து முகிலா லியைச்சொரிந்தான்
மானச் சிதறும பரப்பினிடை
வான்மீ னடுவட் பலமதியம்
வதிந்தா னிகர்ப்பச் சங்கினங்கள்
போந்து துயிலும் பாலிநதிப்
புதுநீ ராடி யருளுகவே
பொற்பார் குளந்தை யமுதவல்லி
புதுநீ ராடி யருளுகவே. 6

வழியுஞ் செழுந்தேங் கமலமலர்
மடவா ரமிழ்தே புனலகத்து
மறைந்தால் யாங்க ணினைப்பிடிக்க
வல்லே மெனவுஞ் சினங்கூறச்
சுழியும் புனனீ யவ்வாறு
துண்ணென் றுளிப்ப மற்றவர்தாம்
துருவிக் காணு தெங்கொழுநர்
சோதிப் பிரான்று டலையென்ற
மொழியு முறுப்போ ரிரண்டையுமே
முன்னிக் காணர் யாமிவளை
முழுதுங் காணே மெனநாணி
முடிசாய்த் தொதுங்கி நிற்பவருள்

பொழியும் பசிய முகில்பாலிப்
புதுநீ ராடி யருளுகவே
பொற்பார் குளந்தை யமுதவல்லி
புதுநீ ராடி யருளுகவே. 7

நிரையுந் தரைது நறும்புனலிற்
றிளைத்து முழுகு மடவார்தம்
செழுந்தேந் தொடையற் சுருப்பினங்கள்
சேட்சென் றகலும படிவிலக்கி
உரையுந் தொழிலு முள்ளமுந்தன
னுழைசேர்த் தழுந்து வோர்மலநோய்
ஒருவுந் தொழிலைத் தெரித்திதழி
உறழும் பொன்னும் வெண்டலைபோல்
நுரையுஞ் சடைபோற றுவர்க்கொடியும்
நுணுகு மதிபோற் கரிக்கோடும்
நுடங்க நடித்து வெளுத்துமறை
நுவலற் கரிய பரம்பொருளைப்
புரையுஞ் செல்வப் பெரும்பாலிப்
புதுநீ ராடி யருளுகவே
பொற்பார் குளந்தை யமுதவல்லி
புதுநீ ராடி யருளுகவே. 8

வேறு

முகமல ரிணையொளி யுகுமதி யாமென
முண்டக நொந்தயர
முன்கையி லேற்றிய சங்கொடு சங்கம்
முழங்கிக் கரைபுரள

மகர நங்குழை யெதிரிய கெண்டை
மலங்கு கயற்குலம்வார்
வாளை கலங்கி யெழுந்து குதிப்ப
வயங்கு சுணங்கிலமென்
றகநெகு புற்புத முலையி னுடைந்திற
அறல்குழல் போற்றகரம்
அணிந்தில மெனநினை தடியிற் றன்கவின்
அழியத் திருமருவிப்
புகழ்நிறை யுங்கம லாகரி பாலிப்
புதுநீ ராடுகவே
பூரண ஞான புராதனி பாலிப்
புதுநீ ராடுகவே. 9

விற்புரு வங்குழை யக்கரு நீல
விழித்துணை செங்குவளை
வெல்லநின் மேனி தழைப்பமு கேரென
வீங்கிய நீர்குடையா
நிற்புகழ் தெய்வ மடந்தையர் மீதினில்
நீள்சிவி றித்துளையான்
நிரைத்த குறுந்துளி தம்முட லெங்கு
நிரத்தலும் வானவர்தா
கற்புரை தோள்கள புதைத்தன ராடக்
கடவுள் சடாமகுடக்
கங்கை யவனறலை யைந்தொடு மாடக்
காசினி கொண்டாடப்
பொற்பு மிகுங்கம லாகரி பாலிப்
புதுநீ ராடுகவே
பூரண ஞான புராதனி பாலிப்
புதுநீ ராடுகவே. 10

நீராடற்பருவம் முற்றிற்று.

பத்தாவது

## ஊசற்பருவம்

ஒழுகொளி பரப்பிக் கதிர்த்தெழும பரிதியை
யொழுக்கித் திரட்டியதுபோல்
உரகமுமிழ் செம்மணித் தூணிறுவி யதனும்பர்
ஒளிநிலாக் கான்றகலைகள்
முழுதுநிறை திங்களை யுருட்டிநீட் டியதேய்ப்ப
முதிர்வயிர விட்டமிட்டம்
முழுமதியி னின்றிழியு மமிழ்ததா ரைகளென்ன
முத்தணி வடங்கடுக்கிப்
பழுதகலு நவமணிப் பலகையிடை மூட்டியப்
பலகைமேன் மதியமிழ்துணப்
பச்சிளங் கிள்ளையொன் றேறின லென்னப
பரிந்திருந் தருளிமுலைமேற்
புழுகொழுக வுயிர்களுக் கருளொழுகு மமுதம்மை
பொன்னூச லாடியருளே.
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே. 1

செயலையந் தாருவை யுதைத்தாடு தொறுமச்
செழுந்தருப் பூக்கள்சொரியும்
செயலுதைக் காற்றுது தனைநீங்க வெண்ணிநந்
தேவைத் தணந்துவிளையாட்
டியலைமேற் கொண்டநின் மீதலர்ப் பூமபகழி
இளையாது சொரிவதெனவும்
இதுகண் டதற்குநேர் விழிச்சுரும் பீந்தருளி
இளநிலா நகைமுகிழ்ப்ப

அயலுறாஉங் கொடிமுல்லை யூழ்த்தலர் சொரிந்திடல்
அருந்துணைமை பூண்டுதானும்
அலர்வாளி பெய்திடுந் திறனெனவு மேர்காட்ட
ஐம்படை பொறுத்தபச்சைப்
புயலொடு பிறந்தருட் கடலொடு வளர்ந்தமின்
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே. 2

நிலம்பொலி யுயிர்ப்பயிர் மலக்கொடுந் தழல்வெம்மை
நீத்துமெய்ஞ் ஞானமலரா
நின்மலா னந்தச் செழுங்கனி கனிந்தோங்க
நிறையருட் சூல்கொண்டுபொற்
கலம்பொலியு முருவெலாம் பச்சென்று தோற்றிக்
கருங்குழற் கற்றைநாப்பண்
கதிர்த்தசிறு கீற்றினை மின்னியொளி கூர்நுதற்
கார்முகங் கவினவாங்கிச்
சிலம்பொலிசெய் கிண்கிணிப் பருமத்தி னற்பெருந்
தீங்குர லெடுத்திடையறுத
திருவருட் டாரைபொழி செய்கைக்கு வாய்பப
சேர்ந்துலாய் நிற்றலுறழப் [வாள்
புலம்பொலியு மடியார்கள சிந்தைகுடி கொண்டவள்
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே. 3

மனக்குல மிடைந்துபின் காட்டவிசை கொண்டாடும்
வன்மையா னினதுருவெலாம்
மணித்திர ணிரைத்தெனச் சிறுவெயர் பொடித்
வழிநின்று பணிகேட்டுநின் [தலும்

அலைக்கலி னைடைத்திறங் கற்கவரும் வெள்ளானை
அஞ்சிச் செவிக்காலெறிந்
தந்தரக் கங்கையை மடுத்துத் துளித்துவெயர்
வாற்றாத் திவலைபரவா
நினக்கடிமை பூண்டுமுன் போற்றுமிவை யோர்முதல்
நெடுந்தருப் புல்லிறுதியில்
நிரந்தலா லனைத்துநின் மயமெனுஞ் செஞ்
நிலையுறுந் திடுவதேய்ப்பப் [சொல்லை
புனக்கிளி நிகர்த்தமென் றீங்கிளவி யமுதம்மை
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரி
பொன்னூச லாடியருளே. 4

திங்களொளி காட்டுமுக பிதுலவு நாட்டச்
செழுங்கய லுதைந்தூக்கலாற்
செம்பொனி னிழைந்தமகரக்குழைக ளுஞ்செவிச்
செங்கமல வூசலாடப
பங்கய விருக்கைமட மாதரது நோக்கிரு
பாலுமிரு வேமாட்டவும்
பாயுங் கயற்குல மசைக்குமவ் வூசலிற்
பாய்ந்திலதிவ் வூசலெனநீள்
அங்கையின் வலித்துநனி யாட்டுதொறு நின்வாய்
அரும்புநகை நிலவெழிலினுக்
காங்கவர் முகத்திங்கள் சாயப் புராணமறை
யாகம மளந்தறிவரும்
புங்கவன் மருங்குகுடி கொண்டவமு தாம்பிகை
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரி
பொன்னூச லாடியருளே. 5

திண்ணிய பொலஞ்சிகரி வாங்கிய பிரான்சென்னி
தெரிகலா மறையோதிமம
செப்புபழி மொழிமாறு மாறுனக் கூர்தியாய்ச்
சேர்ந்துநின் ருள்சுமந்து
தண்ணிய நினதுகண் ணருள்கிடைத் துன்னுழிச்
சார்ந்திறைவ னூடரீரத்
தாள்பணியு மேல்வைமுடி கண்டுகொண் டுயர்
தாங்குவா னெண்ணிவரலும் [கீர்த்தி
கண்ணியவவ் வஞ்சனை யறிந்ததனை யலமரக்
காண்டுமென வுன்னியேறிக்
ககனத்து முன்பின்ன தாகக் கடாவுதல்
கடுப்பவெண் டாளமொய்த்துப்
புண்ணிய மலர்ந்தனைய வொண்பலகை யேறிநீ
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே. 6

அரவமுமிழ் செம்மணித் திரள்சுற் றிழைத்திடை
அலங்கொளிய நித்திலத்தால்
அமைத்தத னடுச்செழுஞ் செமபட் டலங்கரிந்
தவிர்பலகை மீதிருத்தல்
இரவகல வெங்கதி ருகும்பரிதி மண்டலம
இளம்பனிக் கதிர்மண்டலம
எரிக்கடவுண் மண்டலங் கீழ்தொட்டு முறை
மேய்ந்தபூந் தவிசிலடியார் [யான்று
பரவநீ நினறநிலை யொப்பவா லந்தமெய்ப்
பண்ணவன் விழிச்சுடர்கணின்
பாலனுகு காட்சியப் பரிசறிந் தொம்மையும்
பருஉமணித் தவிசெனக்கொள்

புரவுபூண் டருளென்று வேண்டுதல் கடுப்பவுயர்
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே. 7

சுத்தமு மசுத்தமு மெனப்படுங் கொடுமாயை
தூணாக விருளாணவம்
தொடுத்தநெடு விட்டமாக் கருமப் பெரும்பகுதி
தூக்கிய வடங்களாக
வைத்தமா யேயமே பலகையா முடிவிலா
வான்புவனா கோடிமுற்றும்
மகிழ்ந்தாடு வெளியாக வாருயிர்க் குழவிகளை
மரணம் பிறப்பென்னுநோய்
மொய்த்தமணி யூசல்வைத் தாட்டிக் கடைத்தலை
முடங்கா தெடுத்தணைத்து
முதுக்குறை வளித்துமேற் பரமுத்தி வீடுய்த்து
மூவாத வானந்தமாம்
புத்தமிழ் தருத்திமெய்த் தாயாய் வளர்ப்பவள்
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே. 8

நாந்தகப் பொருபடை விதிர்த்தனைய விமையாத
நாட்டத் தரம்பைமாரும்
நவிலக் கரங்கூப்பி யெதிர்நிற்கு முகில்வண்ண
நாயகன் முதற்றேவரும்
வேய்ந்தசெம் பொற்பெரும் பூண்களி னிழைத்தபல
வேறுருவ மணிகளொடுமவ்
விரிகதிர்ப் பேதத்தி னுக்கேற்ப நின்னூசல்
மின்னிழல் பரப்புதோற்றம்

வாய்ந்தமெய்த் தொண்டுசெயு மன்பர்க ளுளந்
வயங்குபரி பாகபேத [தொறும்
மார்க்கத்தி னுக்கிசைய மன்னிநீ விளையாடும்
வாய்மையைக் காட்டவளிவீழ்
பூந்தகர வார்கருங் கூந்தலமு தாம்பிகை
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே. 9

அண்டப் பரப்பெங்கு மண்டிப படர்ந்தபே
ரானந்த வெள்ளம்வாழ
அருட்சரியை கிரியைசிவ யோகமொடு ஞான
அதிகசிவ தருமம்வாழக் [மெனும்
கண்டவர்க் கினியநஞ் சோமேசர் வாழநின்
கட்கடைக் கருணைவாழக்
காசினி யொருங்குசிவ பத்திகுரு பத்திசங்
கமபத்தி செய்துவாழக்
வெண்டிருப் பூதியுய ரக்கமணி வாழமெய்
விளக்குமஞ் செழுத்துவாழ
வேதநெறி சைவநெறி வாழக் குளந்தைநகர்
மேன்மேற் செழித்துவாழப்
புண்டர நுதற்றெண்டர் தங்குழாம் வாழநீ
பொன்னூச லாடியருளே
பூரண மதிக்கருள் புரிந்தகம லாகரீ
பொன்னூச லாடியருளே. 10

ஊசற்பருவம்

ஆகச்செய்யுள் 104.

குளத்தூர் அமுதாம்பிகைபிள்ளைத்தமிழ் முடிந்தது.

உ

# குறிப்புரைமுதலியன

நூலாசிரியர் கருத்து:

மனம் வாக்கில் எட்டாத சிற்சத்தி - மனோவாக்குக் காயங்களால் அளத்தற்கு முடியாத ஞானசத்தி. சித் - ஞானம். இல் உருபுமயக்கம்; கருவிப்பொருள். "மறையினால் அயனால் மாலால் மனத்தினால் வாக்கால் மற்றும், குறைவிலா அளவினாலும் கூறொணா தாகி நின்ற இறைவனார்" என்ற சித்தித் திருவிருத்தம் காண்க. "சத்திதன் வடிவேதென்னில் தடையிலா ஞானமாகும்" எனவும், "அருளதுசத்தியாகும் அரன்றனக்கு அருளையின்றித் தெருள்சிவமில்லை" எனவும் வருவன கண்டுகொள்க. மன்பதை - மக்கட்கூட்டம். உய்ய - பிழைக்க; உஜ்ஜீவிக்க என்றபடி. மலையரையன் - இமயமலையரையன். முதலோர் என்றது பரதவர் முதலியோரிடத்துக் குழந்தை வடிவாய்த் தோன்றியருளியதை என்க. இனம் நாட்டி - பொதுமைகுறித்து. வித்தாரகவி நால்வகைக் கவிகளில் ஒன்று; ஏனைய ஆசு மதுரம் சித்திரம் என்பன. வித்தாரமாவது பலவகைப் பிரபந்தங்களையும் இயற்றுதல். "ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவதானமும்" என ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் கூறியமை சிந்திக்க. வித்தார கவிகளுள் முதலாவதாகவைத்து எண்ணப்படுவது பிள்ளைத்தமிழே என்பர். வித்தாரகவியை

அகலக்கவி என்றும் கூறுவர். ஏன்ற - இயன்ற; பொருந்திய. முனிவு - வெறுப்பு. அகவலின் விருத்தம் - ஆசிரிய விருத்தம். மூன்றுந்திங்கள் முதலாக இருபத்தொரு திங்கள்காறும் கேட்பிக்கத் தக்கது என்பர் இலக்கணவிளக்க நூலாசிரியர்.

அவையடக்கம் :

வித்தார கவிகளில் முற்பட வைத்துப் பேசப படுவது பிள்ளைத்தமிழ் என்பதை இப்பாடலினும் சுவாமிகள் குறித்தருளுகின்றார்கள். குளந்தை - குளத்தூர்; மரூஉ. சோமேசர் - சோமனால் பூசிக்கப் பெற்ற இறைவர். சோமன் - சந்திரன். அமுதவல்லி - இத்தலத்துள்ள அம்பிகை. கோமளப்பருவம் - அழகியபருவம்; அது குழந்தைப்பருவத்தைக் குறித்தது. அருகு ஒன்று - அருகில் பொருந்திய. தாதியர் - தோழிமார். கூற்று - சொல். இமையவரும் - தேவரும; உம்மை சிறப்பு. ஏத்த ஒணு - அகரவீறு தொகுத்தல்; ஒணு: ஒனுத என்பதன் மரூஉ. பெருமாட்டி - பெருமையை ஆள்பவள்; அம்பிகை. பெருமான்: ஆண்பால். மகிமை - பெருமை. வாழ்த்தரியது: அகரவீறுதொகுத்தல். கிரிக்கு இறைவன் - மலையரையன். அவள் - அப்பெருமாட்டி. உளம் கொடியர் - உள்ளத் தாற் கொடியவர்; மீன்பிடித்துக் கொல்லல் முதலிய தீயசெயல்கள் உடையராதலின். வலைச்சேரியினும்: உம்மை இழிவுசிறப்பு. பாசி சங்கு பூட்டி - பாசிமணிகளையும் சங்குமணிகளையும் அணிந்து கொண்டு. பாசி - பலகறை. பெருமையையுடைய மலையரையன் வேண்டுகோளுக்கு இசைந்து அவன்பால் மகவாக அவதரித்தருளிய பெருமாட்டி, மலயத்துவச

பாண்டியமன் தவத்தால் வேள்வியில் தோன்றிய பெரு மாட்டி, கரிய உடலையும் கொலையாகிய கொடுந்தொழி லையும் உடைய வலைஞர்கோன் தவத்தால் பரதவர் குலத்தும் தோன்றி யருளினள். அக்காரணத்தால் வேதங்களானும் தேவார திருவாசகம் முதலிய அருட்பாக்களானும் துதிக்கப்பெற்று விளங்குகின்ற உமாதேவியார் சிறப்பில்லாத என்புன்மொழிக்கும் இரங்கி அருளுவர் என்றபடி. கொங்கையாற் குழை வித்த வரலாறு காஞ்சிப்புராணத்துக் கூறப்பட்டது. ஒருகாலத்திலே கயிலையின் நீங்கிய உமாதேவியார் காஞ்சியை அடைந்தார். அங்கே கம்பாநதியில் சிவ பூசை செய்துகொண்டிருக்கும்போது அம்பிகையின் அன்பைச் சோதிக்கத் திருவுளங்கொண்ட சிவ பெருமான் கம்பாநதியைப் பெருகிவரச் செய்தார். அம்மையார் வெள்ளத்தைக்கண்டு அஞ்சினர். சிவ லிங்கப்பெருமானை வெள்ளநீர் வாரிக்கொண்டு செல் லுமே எனப் பெரிதும் கவன்றார். தம் இருகரங்களா லும் சிவலிங்கத்தைத் தழுவி அணைத்துக்கொண் டார். அப்போது நதி விலகிச்சென்றது. சிவபிரா னும் அம்மையாருடைய அன்பிற்குத் திருமேனி குழைந்து காட்டினார். வளைத்தழும்பும முலைத்தழும் பும் பதியப்பெற்று அம்மையாருக்குத் திருக்காட்சி தந்தருளினார் என்பது வரலாறு.

விநாயக வணக்கம்:

மவ்வரி - அழகு. மணிகொண்ட கோடு என்றமை யின் யானைத்தந்தத்தில் முத்துண்டாம் என்ற குறிப் பும் தோன்றக் கிடந்தது. கோடு - கொம்பு: தந்தம். ஒருமருங்கு - ஒருபக்கம். உண்மையால் - உள்ள

காரணத்தால். கோடு உண்மையால் பெண்மை வடி வென்றும், அஃது இன்மையால் ஆண்மை வடிவு என்றும் கிளக்க அரிதாம் என்க. கிளக்க - சொல்ல. கோட்டைத்தனமாகக் கருதுவதனால் பெண்மை வடிவு என்றார். தனமின்மையின் ஆண்வடிவாகக் கருதப் பட்டது. இஃது ஆண் பெண் என்ற பாற்பகுப்புப் பற்றிக் கூறப்பட்டமை காண்க. இனி, யானையினிட மாக வைத்தே கோடுஉண்மையின் ஆணென்றும், கோடின்மையின பெண் என்றும் சொல்லுதலுமாம என்பர் ஒருசாரார். களிறு ஆண்யானை. பிடி பெண் யானை. இங்கே எதிர்நிரனிறையாகக்கூட்டிப் பொருள் கொள்ள வேண்டுமென்பார் அவர். மீது மாறிய திருக்காட்சியால் அஃறிணை என்றும், கீழ் மாறிய திருக்காட்சியால் உயர்திணை என்றும் கிளக்க அரி தாம் என்க. மீதுமாறியது யானைத்தலை. கீழ்மாறியது பூதவடிவம். இவ்வடிவம் ஆணோ? பெண்ணோ? உயர் திணையோ? அஃறிணையோ? என நிச்சயித்தல் யார்க் கும அரிது எனபதாம. ஐங்கரச் சிந்துரம் - ஐந்து கைகளையுடைய யானை. கழல் - காலணி. செஞ் சரணம் - சிவந்த திருவடிகள். அஞ்சலித்து - வணங்கி. பணி - பாம்பு: படத்தையுடையது என்றும் காரணக் குறி. பணம் - படம. துத்தி - படப்பொறி. அவிர் - விளங்கும. பரூஉ - பருத்த. மணிவிளக்கு - இரத்தின தீபம். பாய் இருள் - பரவிய இருட்டு. படலம் - கூட்டம. செறிந்து - நெருங்கி. பாம்பு அணை - பாம் பாகிய படுக்கை; அது சேடசயனம். ஒருவன் என்றது திருமாலை. திணி கொண்ட - வலிமையையுடைய. மல்லல் - வளப்பம. புயக்குவடு - தோளாகிய மலை: பண்புத்தொகை. விம்ம - பூரிக்க. திளைக்கும் மகள்

என்றது திருமகளை என்க. வாணி - இலக்குமி சரசுவதி அருள் நிறைந்த குளந்தாபுரி. செழுந்தமிழ்க்கவி என்றது இப்பிள்ளைத்தமிழை. குளந்தாபுரி - குளத்தூர்.

## 1. காப்புப்பருவம் :

*1.* கஞ்சக்கிழத்தி - கஞ்சமாகியகிழத்தி: பண்புத் தொகை. கஞ்சம் - தாமரை. கிழத்தி - மனைவி. காந்தன் - கணவன். தாமரையாகிய பெண்ணுக்குச் சூரியனை நாயகனாகக் கூறுதல் மரபு. சிறை செய்த வாறு - சிறையில் அடைக்கப்பட்ட விதத்தை: என்றது, கண்ணபிரான் சூரியனை ஒரு காரணத்தால் சக்கராயுதத்தைக்கொண்டு மறைத்தருளினன். இதனைப் பாரதம் பதின்மூன்காம் போர்ச்சருக்கத்தான் அறிக. செயிர்த்து - கோபித்து. திரு மனைவி - இலக்குமி: திருவாகியமனைவி. மகன் - பிரமதேவன். மருமகள் - சரசுவதி. இவர்களைச் சிறைசெய்தலாவது இலக்குமி செந்தாமரையினும், பிரமதேவன் உந்தித் தாமரையினும், சரசுவதி வெண்டாமரையினும வீற்றிருந்தலின் இவர்கள் வெளிவராமல் இதழ்களைக் குவித்து மூடிக்கொள்ளும என்றபடி. அறிந்தும் - நன்றாக அறிந்து வைத்தும். கேண்மையால் - நட்பால். இறுதிநாள் பயவாமை - இறக்குங்காலம் உண்டாகாதபடி. பரிதி - சூரியன். பரிதியால் - சக்கரப் படையால். ஏந்தற்பிரான் - ஆண்மகனாகிய உபகாரி: திருமால். ஏந்தல்; ஆண்பாற்சிறப்புப்பெயர். புரக்க - பாதுகாக்கக்கடவன். பேர் - கீர்த்தி. மேல் நிலச் சோபானம் - மேல்மேடை நிலத்துள்ளபடி; மாடிப்படி. பேதைமார் - பெண்கள். முகம் சந்திரனுக்கு உவமை.

ஏக்குற்று - கவலைகொண்டு: அம்முக்கெட்டது. அவர் கள் என்றது அப்பெண்களை. கார் கொண்ட - கருமை யைத் தன்னிடத்தே கொண்ட. பின்னல் - சடை. பின்னலாகிய கரிய பாம்பு: பண்புத்தொகை. கரும் பாந்தள் என்றது இராகுவை. உளம் கவலாது - மனத்தில் கவலைகொள்ளாமல். கொள்ளாமைக்குக் காரணம் இந்தச் சந்திரன் பினனேவரும் கரும்பாம பால் பற்றப்படும் எனத் துணிந்தமையால் என்க. சந்திர சூரியரை இராகு கேதுக்கள் விழுங்கும் என்ற மரபை நோக்கி. களி கூர்ந்து - மகிழ்ச்சிமிக்கு. மதியம் வைகு பொழில் - சந்திரமண்டலம் வரையில் உயர்ந்த சோலை. கடவுட்பிராட்டி என்றது அமுதாம்பிகையை.

முடிபு: கடவுட்பிராட்டிதனை ஏந்தற்பிரான் புரக்க.

2. அளி - கருணை, அமரர் - தேவர். அமிழ்து தந்த கதிர் - சந்திரன். அழல்விடம - நெருப்புப்போலும் விடம்: அழலுகின்றவிடம எனினும் ஆம். வெண்டலை - வெண்டலை மாலை: பிரமகபாலஙகள். பரச - துதிக்க. சிவபெருமான பிரமதேவருடைய சிரங்களைத் திருமுடி யில் சிரமாலையாக அணிந்த செய்தி காண்க. இதனை "வள்ள முலைக் கலைமடந்தை மகிழ்நர்தலை மாலைசிர மாலையாக" என்றார் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள். அவர் எனறது திருமால் பிரமரை. இடும்பை - துன்பம். கருகும்படி வெம்புகினற சுடர் அவிரும் அங்கி என்க. அவிரும் - விளங்கும். அஙகி - அக்கினி. இளி - இழிவு. பொன்மலை - மேருமலை. அவுணர் - திரிபுரர்கள். எயில் - திரிபுரம். ஒருங்கு அவிய - ஒருசேரக்கெட. எள்ளரு - இகழ்ந்த. இடுவனம் - சுடுகாடு. ஐது - அழகுடையது. எழுதரும் சொல் - எழுதாக்கிளவி. மறைமுடிவு -

வேதாந்தம். நயந்து - விரும்பி. சூட்டியும், காட்டியும், பூட்டியும், நயந்தும் அருளிய பரம்பரன் என முடிக்க. உள் உற சேர்த்துதும் - இதயகமலத்தில் நன்றாக வைத்துத் தியானிப்பாம். துவன்றி - நெருங்கி. நிழன்று - நிழலைச் செய்து. துதை செய் - நெருங்கச் செய்யும். துணர் - பூங்கொத்து. ததைவு - செறிவு. அளைந்து - அளவளாவி. மகிதலம் - பூமி. அசும்புபட - வழுக்கல் உண்டாக. வெள்ள மட்டு - தேன்வெள்ளம். முகில் அகடு - மேகத்தின் நடுவிடம். அழகு தப - அழகு கெட, தறுகண் - அஞ்சாமை. எண்கரி - அஷ்டகஜங்கள். முடுகுறும் - செலுத்தும். எவரும விள்ள - யாவரும்சொல்ல. பரிதிமண்டலம் - சூரிய மண்டலம். உடு பம் மண்டலம் - நட்சத்திர மண் டலம். உடு பம்: ஒரு பொருட்பன்மொழி; விண் மீன் என்பது பொருள். சுரர் தரு-கற்பகம்முதலியவை. காக்கள் - சோலைகள். சுருதி - வேதங்கள். மல்கு புத்தேளிர் குலம் - நிறைந்ததேவர் கூட்டம். சந்தை - சொன்னவற்றை மீட்டும் மீட்டும் சொல்லல். ஒளி இருந்து - மறைந்திருந்து. உரை விளங்கு - கீர்த்தி மிகும்.

அமுதவல்லியைக் காக்கப் பரம்பரனை உள்ளுறச் சேர்த்துதும்.

3. சுதை தனு - வெண்ணிறமுடையவில். ஒற்றைக் கொம்பு. கோட்டி - வளைத்து. தனுக்கோட்டி: தனு வைக்கோட்டி என இரண்டனுருபு விரிக்க. ஓவாது - நீங்காமல். மும்மாரி - மூன்று மழை; மும்மதம். செங்கொண்டல் - சிவந்தமேகம். அச்சுற்று - அச்ச முற்று. ஊர்தி - வாகனம். இருள் மேகம் - கறுத்த

மேகங்கள். வந்தாங்கு - வந்தாற்போல; ஆங்கு உவம வுருபு. கருமுடிகம் - கரியநிறமுடைய பெருச்சாளி. ஆதிப்பிரான் - முதற்கடவுள்; மூத்தபிள்ளையார். கருநிறமுடைய பெருச்சாளி கரியமேகம். கரியமேகம் இந்திரவில்லை வளைத்து, எவ்விடத்தும் மின்னுதலைச் செய்து, பருவங்களில் தப்பாமல் மும்மாரி பெய்தல் இயல்பு. அது விண்ணில் சஞ்சரிக்கும். வெண்ணிற முடைய ஒருவில்லைவளைத்து, எங்கும் விளங்கி, எப் பொழுதும மும்மாரிபெய்து, நிலவுலகத்திலே சஞ் சரிக்கும சிவந்தநிறமுடையமேகமாம் இது எனக்கருதி மிக்க அச்சத்துடனே இந்தச் செம்மேகத்தைத் தாங்கிக்கொண்டு நம அச்சம நீங்கி வாழலாம என்று அருகிலே வந்து தாஙகி நின்றாற்போல உள்ளது இயல்பாக விண்ணில் சஞ்சரிக்கும கரியமேகம் எனப் பெருச்சாளி வாகனத்தை இவ்வாசிரியர் உருவகம் செய்தனர். சிவந்த திருமேனியையுடையவர் மூத்த பிள்ளையார் ஆதலின் அவர் செமமேகமெனப்பட்டார். பிறைக்கொழுந்து - இளமபிறைச்சந்திரன். சடில வட்டம-சடையை வட்டமாகக் கட்டியுள்ளமை. கணம் - கூட்டம். அகி - பாமபு. மணிப்படம் - இரத்தினத்தை யுடையபடம. தலைஉவா - அமாவாசி. செங்கதிர்க் கிரகணம் கடுக்கும் - சிவந்த சூரியகிரகணத்தையொத்த. சிவந்தசடை வட்டம் சிவந்த சூரியன். அச்சடைவட் டத்தில் அணிந்த பாம்பாபரணம் சூரியனைக் கிரகண காலத்தில் பற்றும்பாம்பு. நீர்மை - தன்மை. பெற்றி - தன்மை.

பிராட்டியைக்காக்க என ஆதிப்பிரான் சரணம் ஏத்தெடுப்பாம்.

4. மாங்குயில் துரந்து-மாமரத்திலுள்ள குயிலைத் துரத்தி. மிழற்றும் - சொல்லும். வானமீன்மாதர் அறுவர் - கார்த்திகைப் பெண்கள் அறுவர். மருமம் - மார்பு. பொன்வள்ளம் - தனபாரம். அமிழ்து - பால். தன் என்றது முருகக்கடவுளை. கமலவீடு - தாமரை மலராகிய இருப்பிடம். முருகவேள் சரவணப் பொய் கையில் அவதரித்துத் தாமரைப்பூந்தொட்டிலில் கிடந்து கார்த்திகைத் தையலார்பால் பாலருந்திய வரலாறு காண்க. கமல மலர் பிரமனுக்கும் உரிய வீடு. திசைமுகன் - பிரமதேவர். வெய்துயிர்த்து - பெருமூச்செறிந்து. சிறையிட்டதே - முருகக்கடவுள். பிரமதேவரை முருகவேள் குட்டிச்சிறையிட்டமைக்கு வேறுமோர் காரணம் இங்கே கற்பித்தமை காண்க. ஓங்கல் - மலை: மேருகிரி. நகைத்து அனலைஊட்டியது - சிரித்துப் புரமெரித்தது. மலையை வில்லாக வளைத் தடுதயன்றி அதனைப் பயன்படுத்திலர் சிவபிரான்; சிரித்தே புரத்தை எரித்தருளினர். மூவிழி - சோம சூரியாக்கினியாகிய முக்கண்கள்: வலக்கண்சூரியன், இடக்கண்சந்திரன், நெற்றிக்கண் அக்கினி. இடைந்து- தோற்று. சரண் புகுந்து - அடைக்கலம்புகுந்து. புண்டரீகம் - தாமரை. புண்டரீகம முகம், பூங்குவளை விழி, மாரன் நுண்ணிடை எனக்கொண்ட அமுது என்க. சூரியனுக்கு அஞ்சியது குவளைமலர். சந்திர னுக்கு அஞ்சியது தாமரை. அக்கினிக் கண்ணுக்கு அஞ்சியவன் மாரன். அடைக்கலம புகுந்தாரைக் காத்தல் கடனாகலின், அச்சந்தவிர்த்து தம உறுப் பெனவே கொண்டருளினார் அமுதாம்பிகை. இடை நுண்மையாகலின் உண்டோ இல்லையோ என்னும படி அருவான மன்மதனை இடையெனக்கொண்டார் என்றனர்.

அமுதைக்காக்கச் சிறையிட்டதேவை நினைவார்.

5. தவளம் - வெண்மை. குரூஉமணி - நிறத்தை யுடைய மணி. குயிற்றி - பதித்து. தமனியம் - பொன். இதழ்க்கதவு - இதழாகிய கதவு: பண்புத் தொகை. மனை ஈண்டுத் தாமரைமலர். அடைத்துத் திறக்கும் தொழில் என்றது குவிதல் விரிதல் களை. முரலும் - ஒலிக்கும். பவளச்சரோருகம் - செந்தாமரைமலர். அன்னை என்றது இலக்குமி தேவியை. நிறுவுதல் - நிறுத்துதல். உற்பவித்த புலவன் - சந்திரன். பண்ணவன் - தேவன். எதிரான புலவன் - சூரியன. பணித்த - விதித்த. இறைவன் - படைத்தற் கடவுளாகிய பிரமதேவன். கவளம் - யானையுண்ணும் உணவின் அளவு; அது திரட்டிக் கொடுத்தலாம். கடாம் - மதநீர். கவுள்துணை - இரு கன்னங்கள் (காது). நெடுங்கை - தும்பிக்கை. களிறு ஈண்டு இந்திரன் யானையாகிய ஐராவதம். பிடர்த்தலை: தலை ஏழனுருபு. கண்ணுயிரங்கொண்ட கோமகன் எனக்கூட்டுக. கௌதமமுனிவர் இட்ட சாபத்தால் அகலிகை காரணமாக நேர்ந்தது இது மன்க. கோமகன - இந்திரன். விடபம் - கிளை; கொம்பு, கைத் தலத்தினில் உருபுமயக்கம். கோட்டி - வளைத்து. துணைத்த - இரண்டாகிய. தெற்றி - திண்ணை. மணித் தெற்றிகள் - இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற திண்ணை கள்; என்றது சித்திரகூடங்களை என்க.

தாமரை மலர் சந்திரனால் குவிதலும் சூரியனால் மலர்தலும் இயல்பு; இது படைப்புக் கடவுளால் நியமிக்கப்பட்டது. அடைக்கும் தொழிலை அன்னை தன்னோடு உற்பவித்த புலவற்கும் திறக்குந்தொழிலை

எதிரான புலவர்க்குமாகப் பிரமன் பணித்தனன் என் றருளினார். பொன்னுலாவிய தமது வீட்டை அடைத் தலும் திறத்தலும் இருபுலவற்குமாக நியமித்தனன். கடலினின்று இலக்குமி தோனறியபின் சந்திரன் தோன்றினான் என்பது வரலாறு. குளத்தூர் மாளி கையிலுள்ள பெண்கள் கற்பகமரக்கிளைகளை வளைத்து மலர் கொய்யின்றமை கூறியது பின்னிரண்டடிகள்.

சுந்தரப் பெண்ணமுதை, ப )ிறைவன புரக்க.

6. அதிரும் தரங்கம் - ஒலிக்கும் அலைகள். குண்டு - ஆழம். அளறு - சேறு. உழக்கி - கலக்கி. அசனிக்கு இகலி - இடி முழக்கத்துக்கு மாறுபட்டு. கலித்து - ஒலித்து. மதத்து அடுக்கல் - மதத்தையுடைய மலை போலும் யானை. தெறித்து - சிதறி. வெகுண்டு - கோபங்கொண்டு. குழூஉக்கொள படை - திரண்ட சேனை. கவல - கவலையடைய. இடறும - எற்றும். கறைத்தாள் - உரல்போலும்கால். இறைக்கும் கடம் - சொரியும் மதநீர். வெண்களிற்றியானை - ஐராவதம. களிற்றியானை: மிமிசைச்சொல். எருத்தம - பிடரி. இவரும் - ஊர்ந்துசெல்லும். புருகூதன் - இந்திரன்; யாகத்தில் அதிகமாக அழைக்கப்படுபவன் என்பர். மதிக்குழவி - பிறைச்சந்திரன். முருகு - வாசனை. கடவுள்நதி - தெய்வநதியாகிய கங்கை. கதிரும விழி கள் - கிரணங்களை வீசும் சந்திர சூரியர்களாகிய கண் கள். இருள் சீப்ப - இருளைக் கெடுக்க. கமலாகரி - குளத்தூரை உடையவளாகிய அமுதாமபிகை. கமலம் - நீர்; ஆகரம் - இருப்பிடம்.

புருகூதன் கமலாகரியைப் புரக்க.

7. கடிப்போது - வாசனை பொருந்திய மலரும் பருவத்து அருமபுகள். பயிலும - சஞ்சரிக்கும். கவலை துரந்து - கவலைநீக்கி. படிப்பாற் பயிலும் மகள் - அதிதி. பரிக்கும் - காக்கும். திகிரிப் படைப்பாணிப் பகவன் - திருமால். திகிரி - சக்கரம். பாணி - கை. மருமத்து உறை மடந்தை - இலக்குமி. மருமம் - மார்பு. இரவி - சூரியன், பவளநிறவேணி - சிவந்த சடை. அணையாக. புனிற்றுமதி - இளஞ்சந்திரன். புனிறு - இளமை. முடிப்பால் - முடியினிடத்து. முதல் வன - சிவபெருமான். இரவி வெம்மை மிசை போவா வண்ணம் விடப்பாம்பு குடைகவிப்ப, கதிர் விரிக்கும் செம்பவள நிறவேணி அணையாக, முடிப்பால் புனிற்று மதி வீற்றிருக்கும் எனக்கூட்டுக. உலகம் முழுதும் உயிர்த்த - உலகம் முழுவதையும் பெற்ற. 'பெற்றாள் சகதண்டங்களும' என்றார் பிறரும். பூங்குழல் அன்மொழித்தொகை.

மொய்பூங்குழலை மருமத்து உறைமடந்தை புரக்க.

8. அளி - வண்டு. ஆதரவு - விருப்பம். அளித்து ஆர் - கொடுத்துத்தங்கிய. வனசம் - தாமரைமலர். பொகுட்டு - தாமரைப்பூங்கொட்டை. அயன் - பிரமன். உளத்தாமரை நச்ச - இதயகமலம விரும்ப. திளைத்து அவன். திளைத்து - அநுபவித்து. உரைப்பால் - நாவில்; உரை - சொல். தரித்தவள் - தங்கியவள். களம் - கண்டம். ஆலம் - ஆலகாலவிடம். இடர்களைத் தேய ஒறுத்து. கடைக்கணித்தல் - அருளல். குளத் தார் நயனத்தற்கு - நெற்றியில் பொருந்திய கண்ணை

உடைய சிவபெருமானுக்கு. குளம் - நெற்றி. நயனம் - கண்.

9. உவட்டெடுத்து - பெருக்கெடுத்து. தாமரைப் பொகுட்டுத் தோன்றற்பெருமான் - பிரமதேவர்; தாமரை ஈண்டுத் திருமாலின் உந்தித்தாமரை. தொகுதி - கூட்டம். பைங்கூழ் - பயிர். கருக்கி - கருகச்செய்து. அஃது செழித்துவிடாமல் என்றபடி; மகிடாசுரனாகிய களை. மகிடம் - எருமை. எருமை வடிவாகவுள்ள ஓர் அசுரன். மகிடாசுரனைக் களை என்றமைக்கு ஏற்பத் தேவர்களைப் பைங்கூழ் என்றருளினார். பாசடை - பச்சை இலை. இவர்ந்த - செலுத்திய. கன்னி - துர்க்கை; கொற்றவை. தெய்வதம் - தெய்வம். பளிக்குமணி மாடம - பளிங்குக் கற்களால் செய்த மாடம். சாயல் - நிழல். பாரா - பார்த்து. இளஞ்சேய் - சிறுபிள்ளைகள். பரிந்து - அன்புற்று. விளிக்கும் - அழைக்கும். பவளமலை - சிவபெருமான். பைங்கொடி - அமுதாம்பிகை. வெளிய மதியம் செம்பவளமலை பைங்கொடி முரண்தொடை. குழந்தைகள் தமது நிழலைப்பார்த்து வருக என அழைத்தல் இயல்பு. சிரமேல் தாள பதித்தல் பாசடையிற் கமலம் போலிருந்தது என்க. எருமை கருநிறம்; கருமை, நீலம், பச்சை இவற்றை ஒருநிறமாகக் கூறுதல் கவிமரபு. துர்க்கையின் திருவடிகள் கமலமலர்போன்று இருத்தலின் அவ்வாறுகூறினார். பைங்கொடி. படர்ந்த பவளமலையின் முடியில் மதியம் தவழும் என்றது ஒரு நயம்.

10. ஒளி - விளங்குகின்ற ஒளி. ஓதிமம் - அன்னம்; வாகனமாக உடையவள் அபிராமி.

எழில் - அழகு. தவளம் - வெண்மை. விடையூர் திறத்தவள் மகேசுவரி. எறுழ் வலி - மிக்கவலிமை. மயில் கடவினளாகி வேலைத்திரிப்பவள் என்க; கௌமாரி. கலுழன் - கருடன். கலுழனை ஏறி நிற்பவள் நாரணி. உலகு அதிர்தர - உலகம் நடுக்கங்கொள்ள. அரி ஏறு- சிங்கவேறு. உகைத்தல் - செலுத்தல். உகைப்பவள் வராகி. கடமழை-மதநீராகியமழை. அயிராவதத்தவள் இந்திராணி. உழிதரல் - சுழலல். குழிந்தவிழி. பேய் நடத்துநள் - பேயை வாகனமாகக் கொண்டு செலுத்தும் காளி. இவர்கள் சத்தமாதர்; முன்னிரண்டு அடிகளில் கூறப்பட்டனர். உவர் எழுமகளிர் - உவராகிய ஏழுமகளிர் என்க: உவர்: சுட்டு. பழிச்சுதும் - துதிப்போம். அலகைகள் - பேய்கள். அழல் ஆர் களம் என்றது சர்வசங்காரகாலத்திலே அக்கினி நிறைந்த இடமாகிய மயானத்தை என்க. தபும் - இறக்கும். பால் நிறக் கலன் என்றது எலும்பு மாலையை. தோளிடை ஏழனுருபு. நிலா என றது நில எனக் குறுகி நின்றது. இரு மூவகைப்படு நெறி - அறுவகைச் சமயநெறி. அவை புறப்புறம், புறம், அகப்புறம், அகம் என்னும் நான்கு பகுதியவாகிய அறுவகைச் சமயங்கள் என்க. அகச்சமயத்தையொழித்து முக்கூற்றுப் புறச்சமயம் என்பர். விரிந்த நூல்களிற் காண்க.

11. அளி - வண்டு. கொழுதி - கிண்டி: கோதி. மது - தேன். பசி சிதைய - பசி கெட. மடுத்து - உண்டு. அளகம் - கூந்தல். கனம் - மேகம். அளகமாகியகனம். மதர் - மதர்த்த (கொழுத்த). விழியாகியகடல். ஆரம் - முத்து. திணி - செறிவு. திதலை - தேமல். பொற்புக் கடல் - அழகாகியகடல். மடித்திரை - வயிற்றிலுள்ள மடிப்பாகிய திரை என்க. இடை ஏழனுருபு. அறல் -

கருமணல். இறமை - தன்மை. ஒழுக்காஉரோமமும் - மயிரொழுங்கு: ரோமாவலி என்பர் வடநூலார். குவலய மடக்கொடி - பூமாதேவி. நச்சி - விரும்பி. கறைப்போர்வை - கரியபோர்வை. கொளுவியது - பொருந்தச் செய்தது. குமரி இருட்டு - விடியற்காலத்தின் முன்னும் இருளிரவின் பின்னும் உண்டாகும் இருள். ஆதவர் - சூரியர். பொற்சக்கரச்சேவல் - அழகிய சக்கரவாகப்புள். குருமணி - நிறம்பொருந்திய இரத்தினங்கள். குயிற்றிய - பதித்த. குருமணி குயிற்றியகுழை, புயம் அலைகுழை என்க. குயமாகிய முடி. குயம் - தலம். முடி - நுனி; சூசுகம். சற்று எடுத்தேறு பார்வை என்றது தனபாரத்தை நோக்கி நிற்றலை என்க. வெறி - வாசனை. உற்பலம் - நீலோற்பல மலர். மறைப்பு - ஒளிப்பு. விழை - விரும்புகின்ற. தன்னலம் - தன்னுடைய நன்மை. தன் எனறது கண்ணைச் சுட்டியது. வியன் நிலம் - விசாலமான இடம். இறுத்தமை - தங்கியிருந்தமை. எணி - எண்ணி; தொகுத்தல். மறம் - சினம். அவை வெருவிவிழ - அந்நீலோற்பல மலர்கள் அஞ்சிவிழும்படி. செற்று உகைத்து - கோபித்துத் தள்ளி; கெடுத்துத்தள்ளி என்றபடி. மறைவிடம் - ஒளித்தற்குரிய இடம். விளையிலி - சிவபெருமான். கரத்து உழை - கையின்கணுள்ளமான். சடைவனம் - சடைக்காடு. அமர் விளைத்து எனக் கூட்டுக. அமர் - போர். இறைமை - தலைமை. இரையும் இருக்கு - ஒலிக்கின்ற வேதங்கள். இருமை விளை - நல்விளை தீவிளைகள். எனையும்: உமமை இழிவுசிறப்பு. அமிழ்தச் சத்தி - அமுதாம்பிகை. வைப்பு - சேமநிதி. கதிர் - அருக்கர்பன்னிருவர். உருத்திரர் - பதினொரு உருத்திரர். வசு - வசுக்கள் எண்மர். மருத்துவர் - மருத்துவரிருவர்; ஆகமுப்பத்துமூவர்.

முடிபு: அளகக கனம விழிக்கடல் குடித்து, கறுத்து, முலைமலையிற் சொரிந்த திதலைநிதியத்திரள், பொற்புக்கடற்பாய, எழில் தருமடித்திரையிடைஅறல் ஒழுக்கை நிகர்த்த உரோம ஒழுக்கும்; குவலய மடக் கொடி கறைப்போர்வையால் உடல் கொளுவியது என அடக்கிய குமரியிருட்டைச் சாடும் ஆதவர் கிரண வுணவினை உண்ணக் குறுகிய சக்கரச்சேவல் போல் குழைக்கு எதிர் குயமளடுத்தேறு பார்வையும்; உற்பலமலர் மறைப்பினில் தன் நலத்தைப் படித் தேகச் செவியிறுத்தமை எண்ணி, மறமிகுத்து. அவைவிழ உகைத்து, மறைவிடம் எனப்படும் விதி என்? எனக் காதிஞெடு அமர் விளைத்துக் குதித்தாடு பார்வையும்; இறைமையும், அளப்பறும அழகும் ஒளிர நிற்பவள் எனக் கூட்டுக.

## 2. செங்கீரைப்பருவம்:

1. பொருவு அரிய - ஒப்பில்லாத. புராதனர் - பழை யோராகிய சிவபெருமான். "முனைப்பழம்பொருட்கு முனைப் பழமபொருளே" என்றமை காண்க. நம் கொழுநர் - நமது நாயகராகிய சூரிய சந்திரர். நம் என் றது தாமரையும குமுதமும். இடர் புரிந்தமையாவது விளையாட்டாகத் திருக்கண் புதைத்தலாலுண்டாகிய துனபம். நமையும என்றது தாமரை, குமுதங்களின் கூற்று. பருவரல் - துன்பம். குமுதம் - அல்லிமலர். பங்கயம் - தாமரைமலர். ஒன்றையொன்று பாது காப்பத் துயிலலாவது தாமரை மலரும் பகற்காலத் தில் குமுதம் குவிந்திருத்தல்: குமுதம் மலரும் இராக் காலத்தில் தாமரை குவிந்திருத்தல்: மலர்தலும்

குவிதலும் ஈண்டு விழித்திருத்தலும் துயின்றிருத்தலுமாயிற்று. வரமடந்தையர் - தெய்வப் பெண்கள். பரிந்து - விரும்பி; அன்புசெய்து. சீர்த்தி - மிகுபுகழ். புவி - பூமி. பதித்து - ஊன்றி. இந்த்ர திருவிற்கு - அழகிய இந்திர தனுவின்கண்: உருபுமயக்கம். தரள நிரை - முத்துக்களின் வரிசை. இந்திரவில் புருவத்துக்கும், தரளநிரை வேர்பொடித்தலுக்கும் உவமை. நுதல் - புருவம். சிற்சபை - ஞானவடிவாகிய சபை. அற்புதன் - ஞானமே திருமேனியாகவுடையவன்.

இப்பாடலில் செங்கீரையாடுதலின் நிலை கூறப்பட்டமை காண்க. அற்புதனை ஆட்டுதலாவது திருச்சிற்றம்பலத்திலே இறைவர் அற்புதக்கூத்து நிகழ்த்துவதைச் சிவகாமியம்மையார் கண்டிருப்பர் என்றபடி. ஆன்மாக்களின் பாசநீக்கம் கருதி அம்மையார் ஞானமா நடனத்தைக் கண்டிருத்தல் குழந்தையின் பொருட்டுத் தாய் மருந்து உண்ணுதலை ஒக்கும் என்பர். இதனை, "இளங்குழவிப் பிணிக்கின்ற தாய் மருந்து நுகர்வதுபோல் இருளின் மாண்ட, களங்குலவு மலவுயிர்கட் கொழியவருள் நடங்காணும் கடன்பூண்டு, வளங்குலவு தவதுபெருங் கற்புமொரு கணவடிவாற மாண்பும் தோன்ற, விளங்குமிர ணிய மன்றில் நின்றருளும் மணிவிளக்கை விளம்பி வாழ்வாம்" எனத் திருவானைக்காப் புராணத்துக் கச்சியப்ப முனிவர் கூறியமை காண்க. "பாலுண் குழவி பசுங்குடர் பொறாதென, நோயுண் மருந்து தாயுண் டாங்கு, மன்னுயிர்த் தொகுதிக் கின்னருள் கிடைப்ப ......, வையமீன் றளித்த...... இருந்திழை காணச், சிற்சபை பொலியத் திரு நடம்புரியும், அற்புதக் கூத்த" என்னும் சிதம்பரமும்மணிக்கோவைச் செய்யுளானும்

அறிக. இதனால், அம்பிகை நடராசமூர்த்தியின் திரு நடனத்தைத் தான் தரிசித்து அதன்பயனை உயிர்கள் நுகரவைத்தருளுவாள் என்பது குறிக்கப்பட்டது.

2. பொங்கு அரி - மிகுந்த ஒளி. நாண்முகை - அன்றலரும் பருவத்தரும்பு. எழு பரித் தேர் - ஏழு குதிரைகள் பூட்டப்பெற்ற தேர். கடாய் - கடவி; செலுத்தி. உயிர்த்த - ஈன்ற. தாமரை முகிழ்த்துணை - தனங்களாகிய தாமரையரும்புகள் இரண்டையும். தண்டாத - நீங்காத. முறுக்கு உடைத்து - கட்டு அவிழ்த்து. தணவல் - நீங்கமாட்டேன். வெம் கதிர்க் கற்றைகள் - விரும்பும் கிரணத்தொகுதிகள். வெம் - கொடிய எனினுமாம். மகரக்குழை - மகரவடிவமாகச் செய்த காதணி. வதனத்திங்கள் - முகமாகிய சந்திரன். மகரக்குழை முலைத்தலைக்கதிர் உமிழ்ந்து நிற்பது பரிதிப்பிரான் போந்து கதிர்க்கற்றைகளைப் பரப்பி உலவுதலைப்போலும் என்க. பரிதி - சூரியன்.

3. கார் பூத்த மறு - கரிய நிறத்தையுடைய களங்கம். கவின்ற - அழகைச்செய்கின்ற. கமலவதனம் - தாமரைபோலும் முகம். உள் கவன்று - மனத்தில் கவலையுற்று. பொங்கர் - சோலை. காவணம் - பந்தர். பரியமதில் - பெரியமதில். நூழை - சிறுவாயில்; திட்டிவாயில் என்பர். பங்கயச்செல்வி - இலக்குமி. அங்கை - அரவிந்தம - தாமரை. கூம்ப - குவிய. - தேன்துளிகள். களங்கத்தையுடைய சந்திரன் பதினாறு கலைகள் நிரம்பியதாயினும் உன்னுடைய முகத்தைக் காணுந்தோறும் மறுவற்ற மதியென உட்கொண்டு கவலை கொண்டு அஞ்சி ஓடுகின்றது; உன்னை வணங்கவரும் இலக்குமி

முதலிய தெய்வப் பெண்கள் கைகூப்பி வணங்கு கின்றனர், கண்ணில் நீர்மல்க நின்று மகிழ்கின்றனர்; ஆகலின், அருளாகிய அமுததாரை ஒழுக முகமதியம் அசையச் செங்கீரையாடுக என்று தாதியர் கூறு கின்றனர் என்க. நின்முகமாகிய மதியத்தைக்கண்டு கையாகிய அரவிந்தம் கூம்புதல், விழிக்குவளை அலர் தல் என்ற நயம் காண்க.

மறுவுண்டமதி, அஞ்சி நுழைந்து ஓடவும், கூம்ப வும், அலரவும் முகமதியமாடச் செங்கீரையாடியருள்.

4. மணிதுற்ற-இரத்தினங்கள்நெருங்கிய. தவிசு-ஆசனம். பருமம் - பதினாறு கோவை மணிவடம்; பதினெண்கோவை எனினுமாம். மனை என - மனைவி என்று. வாக்குவது - சொரிவது. தீம்பயம் - இனிய பாலமுது. பணிலம் - சங்கு. வாய்க்குமுதம் - வாயா கியகுமுதமலர். மாசு - களங்கம். பரியாது - தங்காது. சாலாது - ஒவ்வாது. பார் - பூமி. நுதலாகிய மதி. நுதல் - நெற்றி. நெற்றியில், திலத்தை நீரால் தேய்த் துப் பொட்டிடுதல் மரபு: அது திலப்பொட்டு. கழை - மூங்கில். மஞ்ஞை - மயில். புயம் மூங்கில். இருமதி - இரண்டு சந்திரர். முத்தாடி - முத்தங் கொடுத்து. மேனை - இமயமலையரையன் மனைவி. மயில் - மயில் போலும் சாயலையுடைய அமுதாம்பிகை.

5. முக்கனி - வாழை மா பலாக்கனிகள். செறித்த - நெருங்கிய. வெண் முகை அனைய மூரல் - வெண்மை யான அரும்பையொத்த சோறு. முல்லையரும்பு சோற்றுக்கு உவமை. அறுகால் - ஆறுகாலையுடைய வண்டு; ஷட்பதம் என்பர் வடநூலார். மூசிய -

மொய்த்த. இளம் பொங்கர் - இளமரக்கா. தேசு - ஒளி. தண்ணீர்ப்பந்தர், அன்னசாலை, நீர்நிலைமுதலிய அறங்கள்: அவை முப்பத்திரண்டு என்பர். ஆகலின், அறம் யாவையும் என்றார். வேத சிவாகமங்களில் விதித்த படி இயற்றுநாள். இதனைக் காஞ்சிப்புராணம் தழுவக் குழைந்த படலம் 238 முதல் 269 வரையுள்ள செய்யுட்களால் அறிக. இயற்றுநாள் என்றது காஞ்சிபுரத்தில் செய்யுங்காலத்தில் என்க. தோலாதகருணை - நீங்காத அருள். கூர்ந்து - மிகுந்து. சோமேசனார் - சிவபெருமான் என்ற பொதுமை நோக்கி; இத்தலத்து இறைவர் திருநாமம்: காஞ்சியில் ஒரு மாவிற் பெருமான். குழைவித்த வரலாறு அவையடக்கச் செய்யுளிலும் குறித்தபடி. மடமாதரார் என்றது உயிர்த்தோழிகளே. இளமை பொருந்திய பெண்கள்: அறியாமையை யுடைய பெண்கள் எனத் தொனித்தலும் காண்க. திக்கு எட்டும - எட்டுத்திககிலும உள்ளவர். என்று தெளித்திடுவது ஏய்பப எனக்கூட்டுக. தெளித்திடுவது - தெளியச்செயவது. ஏய்பப - ஒப்ப. முகமறியர் அசைந்திடுவது என்று தெளித்திடுவதை ஏய்க்கும் என்க.

6. பொங்கு எழில் - மிக்கஅழகு; பேரழகு மன்ற படி. போது - நீலோற்பலம். அரி - கருவரி செவ்வரிகள். மறிந்து - மடங்கி. செங்கதிர் - சிவந்தகிரணம். மணிக்கல் - மாணிக்கக்கல். செயிர் அறு - குற்றமற்ற. பிதிர்ந்து தெறித்திட - உதிர்ந்து சிதற. தம்மிலை சார்ந்து இடையாவகை சாற்று - வீரர்களாகிய தங்களை கள் அணுகிப்போரில் தோற்றோடாத வகைமைய படுத்துத் துதிக்க. மொய் தாம அயிற்படை - நெருங்கிய மாலையணிந்த வேலாயுதத்தால். தாமம் - மாலை.

அயில் - வேல். குருதி - இரத்தம். அமர் ஆடுதல் ஆம் எனா - போர்செய்தலை ஒக்கும் என்றுசொல்ல. கண்ணிற்கு அயிலும், மணிக்கல் பொன்னரும்புக்குக் குருதித்துளியும, குழைகட்கு வீரர்களும் உவமிக்கப் பட்டன காண்க.

7. பம்பி - பரவி. பாலொளி கான்ற நறும்புனல் - பாலாறு. கம்பை - கம்பாநதி. வில் - ஒளி. வேணி - சடை. விண்ணேனை - சிவபெருமானை. வடம் - மணி வடம். மார்பு உழ - மார்பிலே உழுதலைச் செய்ய. புல்லி - தழுவி. ஆடி - விளையாடி. அல்லி - அகவிதழ். கம்பையாற்றுக்கு வயிரத்தொட்டிலும், வேணி விண்ணோனுக்குப் பொன்னணி பாவையும் உவமை. அமுது - ஆமுதாம்பிகை: விளி.

8. செந்துகில் - சிவந்த ஆடை. அரக்கு அலர் வாழ்க்கை-செந்தாமரையில் வாழ்ந்திருத்தல். அரக்கு - சிவப்பு. மருவி து குலாவி எனக் கூட்டுக. அவர் - அவ் வன்னையர். கலைப் பொலி மதி. முகமாகிய மதியும் குழலாகிய முகிலும். வாயாகிய குமுதம். கதிர்த்த - விளங்குகின்ற. நகையாகிய தளவு. தளவு - முல்லை. குமுதம் - செவ்வாம்பல். கையாகிய கமலம. அரும்ப - அரும்பும்படி. முலையாகிய கமலச் செழுமுகை என்க. முகை - மொட்டு. நட்பு முயங்கிட - அன்பால் தழுவ. கையைக் குவித்து அன்னையர் முலைமேல் வைத்து என்னும் கருத்தால் 'கைக்கமலம் குவியா, முலைக் கமலச் செழுமுகையொடு நட்பு முயங்கிட' என்றார். வாடல் உறும் மூரி வளத்து உதரத் திருஆல் - பசியால் வாடும் பெரிய வளமுடைய வயிறாகிய அழகிய ஆலிலை. மூரி - பெரிய. உதரம் - வயிறு. திரு - அழகு.

அலக்கண் அற - துன்பம் நீங்க. சுவை ஆர் அமிழ்து - சுவை மிக்க அமிழ்து. அமிழ்து என்றது முலைப்பாலை. உண்பவள்: விளி. மதிகண்டெனக் குமுதம் அலர, முகில் கண்டெனத் தளவு அலர என்க.

குலாவி அலர குவியா முயங்கிட தழைய உண்பவள் எனக் கூட்டுக.

9. வானம் - ஆகாயம். கரிய மேகக் கூட்டங்கள். வறந்து - வற்றி. வன் மால் வரை - வலிய பெருமை தங்கிய மலை. இமிர் வண்டு - ஒலிக்கின்ற வண்டுகள். ஊதும் போதும் - கிண்டுகின்ற போதுகளும். போது - மலரும்பருவத்தரும்பு. நானம - கத்தூரி. முயங்கிய - கலந்த. நந்தா - கெடாத. தீபத்தினது நாவில். தூமம் - புகை. மென்சாயல் - மென்மையான அழகு. மேனி - வடிவம். போதும் நானமும் முழுங்கிய குழலானது தீபநாவில் எழுந்து ஒளிர் தூம ஒழுங்குபோல் இருக்க, மேனியிலே நிறத்தைத் தரும் மேனை. மேனை - இமையமலையரையன் மனைவி. மேனி நிறத்துக்குத் தீபம் உவமை. அணங்கு - அழகு. விழைந்து-விரும்பி. ஆர்வம் கூர - ஆசைமிக. ஊறு தேன் இறை - ஊறுகின்ற தேனைத் துளிகளும். செங்கீரை செங்கீரை என்பது செங்கோ செங்கீரை என மருவியது என்பர்.

10. கோலம் - அழகு. இமயம் - இமயமலை. பாத கோகனதம் - திருவடித்தாமரை. ஞாலம் அளந்தவன் - திருவிக்கிரம அவதாரத்தில் தரையை ஓரடியாக அளந்த திருமால் - அளந்தவன்: வினையாலணையும் பெயர். நாடும - ஆராய்கின்ற. நங்காய் - பெண்களிற் சிறந்தவளே. வெவ்விய கோபத்தையும்

அச்சத்தையும் செய்யும் விடம். காமரு கண்டர் - அழகிய கண்டத்தையுடைய பெருமான். "கறை நிறுத்திய கந்தர சுந்தரக் கடவுள்" என்றார் பரஞ்சோதிமுனிவர். ஏலம் - மயிர்ச்சாந்து. அளைந்து - அளவளாவி; கலந்து. எம்தாய் - எமது தாயே: விளி. ஈறுபடும்படி - நாசமாம்படி. சீலம் - நல்லொழுக்கம். கமலாகரம் - குளத்துறை.

### 3. நாலப்பருவம்:

1. தேறல் மடுத்து - தேனை உண்டு. அடைகிடக்கும் - நீங்காதிருக்கும். "மகரக் களிவண் டடைகிடக்கும்" (மீனாட்சி - பிள்ளைத்). தடம் - தடாகம். செம்மணி - மாணிக்கம். குடுமி - உச்சி. பணியுலகம - நாகலோகம். இதுவும் - இத்தடாகமும். அரவம் - பாம்பு. அழுக்காறு-பொறாமை. தன் கீழ்ப்படத் தாழ்த்தும் இயல்பை அறிந்தால் என - தனக்குக் கீழாம்படி தாழச்செய்யும் தன்மையை அறிந்தாற்போல. இதனால் தடாகத்தின் ஆழம் நாகர் உலகத்திற்கும் கீழாயுள்ளது என்பது அறியப்படும் என்க. கரைக்கண் பொதுளி உறவுகொண்ட நறும் பொதும்பர் - (அத் தடாகக்) கரையினிடத்து நெருங்கி அதனோடு நட்புக் கொண்ட நல்ல சோலையானது. நாகர் உலகு என்னும் ஒப்புமையால். நாகர் - தேவர், பாம்புகள். புலவர் - தேவர். புலவோர்பதி - தேவலோகம். பொன்தாது - பொன்போன்ற மகரந்தப்பொடிகள். பணிலம் - சங்கு. தரளம் - முத்து. நால் - நா.

சோலையானது தன் நட்பாளனாகிய தடாகத்தைக் கீழ்ப்படத் தாழ்த்திய பணியுலகத்தைத் தாழ்த்த

முடியாமையை நினைந்தது; தான் மேலுயர்ந்தது; நாக ருலகத்தை (தேவர்)ப் பெயரொப்புமை கருதித் தாழச் செய்தது என்க. சோலை தேவருலகத்திற்கும் மிக்கு உயர்ந்தது என்பது கருத்து.

2. இருள் கால்சீத்து - இருளைக்கெடுத்து. கால் சீத்தல் - வேரோடு களைதல். சோதிவெயில் - சோதி யாகிய வெயில்: பண்புத்தொகை. செக்கர்மணி - சிவந்தமணி: மாணிக்கம். இமைக்கும் - செய்திருக்கும். உயர்த்த - உயர எடுத்துக் கட்டியுள்ள. கேதனம் - கொடி. அருள்கால் - அருளைச்செய்யும்: இன்பத்தைச் செய்யும் என்றபடி. அமரும் பரிசு - தங்கியிருக்குந் தன்மை. தழல் நாப்பண் - அக்கினியின் நடுவிடத்தில். அறவோர் கடுக்கும் - தவசியையொக்கும். மேனிலம் - மேடை நிலம் என்க. மாணிக்கக்கற்கள் பதித்த பசும் பொற்றலத்தில் உயர எடுத்துக்கட்டிய தாணியிடத்து வெண்மையான முழுமதியம் தங்கியிருக்கும் காட்சி அக்கினியின்மத்தியில் நாட்டிவைத்த தூணின் மேல் வடிவமுழுதும் திருநீறு சண்ணித்த தவசி இருந்து தவஞ்செய்தலை ஒக்கும் என்க. சுருளையும் வாசனையையும மலரையும உடைய கூந்தல். இளந் தோகை - இளமயில். எதிராகநடிக்கும் சுரமகளிர். விழித்தொழில் - விழிகள இமைத்துச் சுழலுதல். இமைத்துச் சுழலுந்தன்மை இமையா நாட்டமுடைய தங்கட்கு இன்மையால் சுரமகளிர் தோல்வியுற்றனர் என்றபடி. சமழ்க்கும் - நாணத்தையடையும். பருகா அமிழ்து - உண்ணாத அமிழ்து; ஆராவமுது என்ற வாறு. நாவாற்சுவைக்கும் ஏனைய அமிழ்துபோலாது அம்மையார் கண்ணாற்கண்டு தெவிட்டாது நுகரும் அமிழ்துபோல்வாள் எனக்குறித்தபடி.

3. மணம் கேழ் வனசம் - மணத்தையும் ஒளியையும் உடைய வனசம். கேழ் - நிறம், ஒளி. வனசம் - தாமரை. ஊற்றெடுத்து - பெருக்கெடுத்து. மதுவை வார்க்கும். பொகுட்டு - தாமரைப் பூங்கொட்டை. சுறு - சுறுமீன். கருவுயிர்க்க - ஈன: பிரசவிக்க. வயின் - இடம். கணம் - திரட்சி. கேழ் - நிறம். அயில் - கூர்மை. முள் தாள் படுத்து - முள்ளையுடைய தண்டாகிய தாளினால் அகப்படுத்து. கவை தாள் இடை அற்று - அந்த ஞெண்டின் பிளவுபட்ட தாளினாலே இடையே வெட்டப்பட்டுத் தண்டு அறுபட்டு. அலையூடு - அலைகளிடத்து. முரல - ஒலிக்க. துவக்குண்டு - (கச்சினால்) பிணிக்கப்பட்டு. சுணங்கு - தேமல். பெண்ணணங்காகிய நின்னை. தாலெடுப்ப - நாவசைத்துப் பாட்டைப் பாட. துயலும் - தொங்குகின்ற. தொடு நீர் வாவி - கடல்போலப் பரந்து விளங்கும் நீரையுடைய குளம். தொடுநீர் - கடல்.

வனசம், பொகுட்டிலே சுறுவைச் சுமந்து ஞெண்டின் தாளால் வெட்டப்பட்டு அலையூடு (அசைந்து) வண்டுகள் முரல நின்னைச்சுமந்து மகளிர் தாலெடுப்பத் துயலும் மணித் தொட்டிலைக் காட்டும் எனக் கூட்டுக.

4. களபக்கலவை - கலவைச் சந்தனக்குழம்பு. கரடக்களிறு - மதநீரையுடைய யானை. மருப்பு - கொம்பு. முலைக்குவடாகிய மலை. கவின்ற - அழகு செய்த. உரோமப் புழைக்கரத்தால் - மயிரொழுங்காகிய துதிக்கையால். புழை - துவாரம். நொந்து அங்கு அலமந்து இறும். அலமந்து - சுழன்று. இறும் - ஒடியும். சிற்றிடையார் - சிறிய இடைட்

யுடைய மகளிர். நுவலும் கிளவி - சொல்லும் சொல். இடைந்த - தோற்ற. நுவலாது - பேசாமல். குயில் கார்காலத்தில் வாயடைத்திருத்தலும் வேனிற் காலத்தில் பாடுதலும் இயல்பு. இதனை மகளிர் சொல்லுக்குத் தோற்ற குயில் சில காலம் வாய்திறவாமல் இருந்து பயின்று பின்பு பாடினும் ஒப்பாகாமையின் பின்பும் வாயடைத்தது என்றார். தவறு - பிழை. பொழில் - சோலை.

வேனிற்காலத்தில் நவிலும் மாங்குயில்கள் கார்காலத்து வாயடைத்தலை இவ்வாசிரியர் தாம் அருளிச்செய்த காஞ்சிப்புராணம் - நாட்டுப்படலம் 62-ஆம் செய்யுளில் "நலம்ப யின்றிள வேனிலி னவிலுமாங் குயில்கள், அலம்பு கார்வரும் போதுவா யடைப்பது முன்னாட், புலம்பு கொண்டவர் காரொடுந் தலைவர் தேர் புகுத, வலம்பு னைந்துரை வளமொழிக் கிடைதலா னன்றே" என்றருளினமை காண்க.

5. உவட்டெடுத்து - பெருக்கெடுத்து. இரதம் - சாறு. சுவைத்து - கடித்துச் சுவைத்து என்க. சாடி - முறித்து. தூங்கும் - தொங்கும். தெங்கு - தென்னை. கதலி - வாழை. கமுகு - பாக்கு. ககனம் - விண். தரு - கற்பகம். அதன்மீது படர் கொடி - கற்பகவல்லி. குனித்து - நடித்து. வரிந்த கழை - கட்டியிருக்கின்ற மூங்கில். பொருநர் - கூத்தர்: அவர் கழைக்கூத்தர். மான - ஒப்ப. குரக்குக் குலம் விளையாடிக் குதிக்கும். பொதும்பர் - சோலை. திறம் - நன்மை: தன்மை எனினுமாம். பரிந்து - விரும்பி.

6. சுலவி - சூழ்ந்து. தரளக்குவை பவளக்குவை. துவலைத்திரை - நீர்த்துளிகளையுடைய அலை. மைக்

கடல் - கரியகடல். இருசுடர்கள் - சூரியசந்திரர். அச் சுடர் தாம சிலை - அச் சூரியகாந்தக்கல் சந்திரகாந்தக் கல். கவினை - அழகுபொருந்த. குயிலும் உரு - (மதில் களிற்) பதித்த வடிவங்கள். சந்திரகாந்தக் கல் புனல் புடை பெருகச்சிந்தி, சூரியகாந்தக்கல் தீயைப்புடை பெருகச்சிந்தி. பனிகூர்பொழுது - பனிமிக்க காலம். அறம் ஆற்றுநர் - அறமாகிய தவத்தைச்செய்வோர். ஒள் எரி வாய் - ஒளிபொருந்திய தீயினிடத்து. தவ நோன்பு உழப்பவர் - மிக்க தவத்தைச் செய்வோர். பொரும் - பொருவும்; ஒக்கும். வெப்பு உடை வேனிற் பொழுது. எரிவாய்: வாய் ஏழனுருபு. தவ - மிகுதி: உரிச்சொல். நொச்சி மதில்: ஒருபொருட் பன்மொழி.

உருக்கள் சந்திரன் முன் புனலையும், சூரியன்முன் கனலையும் சிந்திப் புனலில் அறமாற்றுநரையும் எரி வாய்த் தவநோன்பு உழப்பவரையும் பொரும்.

7. கொங்கு - வாசனை. மது - தேன். குவிய, நிறைய. கழிந்து - பதனழிந்து. தண்ணிய - குளிர்ந்த. தாது - மகரந்தப்பொடிகள். எருக்குவை - எருவின் குவியல். பங்கம் - சேறு. பசும்புரவித் திரள் - பச்சைக் குதிரைகள் ஏழு. கவரி - சாமரம். ஒசிந்து அசையும் - துவண்டு அசையும். பணிக்கு ஏவ - பணிவிடைசெய்யஎன்று. தகரம்-மயிர்ச்சாந்து.

மெய்யடியார்க்குரிய பணிவிடை செய்வதே மக்கட் பிறவியின் பெரும்பயன் எனக் குறித்தமை சிந்திக்க.

மதுப்புனலாக் குவிதர, தாது எருக்குவையா, விளைந்து எழு நெற்குலை பரிதிக் கடவுள்புடை கவரித் தொகை வீசுவபோல ஒசிந்து அசையும் கமலாகரம்.

8. வேலை முகட்டு - கடலின்மேல். பாய் - பரவிய. கான்று எழு - வெளிப்படுத்தி எழுகின்ற. செம்மணி - மாணிக்கக்கற்கள். திவள - விளங்க. வாள் - ஒளி. மகரத்திரு அணி - மகரவடிவாகச் செய்யப்பட்ட அழகிய அணிகலம். அக்கடல் மகரமென - அந்தக் கடலிலேயுள்ள மகரமீன் என்று சொல்ல. சிலைபடு கணை என - வில்லில் பூட்டிய அம்பு என்னும்படி. நுதலில் சுட்டிதரித்து - நெற்றிச்சுட்டியை அணிந்து. பொட்டு - சிந்துரப்பொட்டு. பிரதாபம் செந்நிறம் எனவும், கீர்த்தி வெண்ணிறம் எனவும் கூறுதல் மரபு. தவளப்பணி - வெண்ணிறமான முத்துக்களால் செய்யப்பட்ட அணிகலம். பொட்டுப் பிரதாபம், தவளப்பணி கீர்த்தி என உவமிக்கப்பட்டமை காண்க. இதனை, " தனது சீர்த்தியும் திறற்பிர தாபமும் தரை மேல், அனல்செய கோபமும் முல்லையு மெனஎங்கு மமைத்துப், புனிதமாமவை தன்னையும் பொதிந்து கொண் டெனனப், பனிவி சும்பினிற் சிவந்துவெண் ணிறமபடைத் தன்றே " எனக் காஞ்சிப்புராணம் - நாட்டுப்படலம் 10-ம் செய்யுளில் இவ்வாசிரியர் கூறி யருளியமை காண்க. " பாலாறு பங்கயச்செங் தேனு றுடன்கடவுள் வானு றெனப்பெருகு சித்தாமிர்தம் சிவபிரான், சீர்த்திப்ர தாபமிகர் இலகர புரிக்தேவ தேவனைக் காக்க வென்றே " எனக் குமரகுருபர சுவாமிகளும் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் அருளிச்செய்தமையும் அறியத்தக்கது.

9. வெண் புணரி - பாற்கடல். மீதேரன் - மேலே பள்ளிகொண்டருளும் திருமால். வேதா - பிரமன். வேல் சேல் கண்களுக்குவமை. அளி ஈவாய் - கருணை யைத் தருவாய். தாவாது - நீங்காமல். கூறங்கும்

வண்டு - சுற்றும் வண்டுகள். அளகம் - கூந்தல்; நெற்றி முன் மயிர் ஈண்டுக் கூந்தலுக்காயிற்று: ஆகு பெயர். ஏனோர் - பகைவராகிய திரிபுரத்தார். புரங் கடந்த - புரங்களைவென்ற. சேயார்பால் - செந்நிறத் தையுடைய சிவபெருமான் பக்கலில். இலம் குளந்தை - (இல்லம்) தங்குமிடம் குளந்தைநகர்.

10. மலங்கு அடங்கும் அருள் ஊராய் - மலங் குதல் குறையும் அருளுக்கு இடமாய் இருப்பவளே. மலங்கல் - கலங்குதல். மலங்கு: முதனிலைத் தொழிற் பெயர். மலங்கள் தங்கும் மருள் ஊராய் - ஆணவம் கன்மம் மாயை ஆகிய முக்குற்றங்களும் தங்கும் மயக்கம் செல்லாதவளே. மருள் - மயக்கம். ஊர்தல் - செல்லுதல். கலம் கலந்த அரை ஏய் ஆய் - (மேகலை முதலிய) அணிகலங்கள் பொருந்திய இடையை யுடைய தாயே ஆய்: அண்மைவிளி. கலங்கு அலந்த வரை ஏயாய் - (அறிவு) கலங்குகின்ற துன்பமுற்ற வரைச் சாராதவளே. அலந்தவர் - துன்பமுற்றவர். புலம் கடந்த பரம் நாடாய் - எல்லாத் தேயங்களையும் கடந்துநின்ற முத்தி நாட்டை உடையவளே. பரம் - மேலான முத்தி. பரநாடு - மேலான முத்தியுலகு என்க. புலங்கள் தந்து அபரம் நாடாய் - (தன்னடி யார்கட்கு) அறிவுகளைத் தந்தருளி அவ்வருட் செய லில் பின்னிடுதலை நாடாதவளே. அபரம் - பின். பரஞானம் அபரஞானம் என ஞானம் இரண்டாகலின் புலங்கள் எனப் பன்மையாற்கூறினர். இலங்கு உளம் மைதவரு தாளாய் - (சிவஞானம்) விளங்குகின்ற அடி யார்கள் உள்ளத்திலே பொருந்தும திருவடிகளை யுடையவளே. மைதவரல் - தடவுதல்; ஈண்டுப் பொருந் துதல் எனக்கொள்க. இலம் குளந்தை வருதாளாய் -

குளந்தைப்பதி இல்லமாகவரும் முயற்சியையுடைய வளே. தாள் - முயற்சி.

## 4. சப்பாணிப்பருவம்:

*1.* உருப்பொலி - நிறத்தால் விளங்கும். மணி - நீலம். மணிப்புனல் என்றது நீலத்திரைக்கடலை. உடுக்கை - ஆடை. புவிக்கொடி - பூமிதேவி. உரம் - மார்பு. கடலாற்சூழ்ந்த நிலவுகம் என்பது பொருள். கடலைப் பூமிதேவியின ஆடையாகக் கூறுதல் மரபு. உருத்து - கோபித்து. "நீ ஒன்று செய்யிற் பத்துச் செய்வோம்" என்பது பழமொழி. 'ஒன்று கொடுத்துப் பத்து வாங்கினன்' என்று கூறுதலும் உலகவழக்கு. உரை - சொல். இலக்கியா - இலக்கணத்தைப் பொருத்து மிடம. குரு - நிறம். விரற்செறி - விரலில் செறிப்பதாகிய (மோதிரம்). செறித்து - நிறைத்து. பொலந்தொடி - பொன்வளையல். நிருத்தாதை - இமய மலையரையன். கிளை - சுற்றமாகிய மேருமலை. குழைத்து - (வில்லாகக்) குழைவித்து; விவ்விகுதி தொக்கது. பணித்த - ஏவல் கொண்ட. இறைவன் - சிவபெருமான். கடுக்கை - கொன்றை மலர் மாலை: அஃது அடையாளப் பூமாலை. தழை - செழித்த. தோட்குவடு - தோள்களாகிய மலைகள். இறைவனுக்குத் தோள்கள் பத்து என்பதனை, "திகடசக்கரச் செம்முகமைந்து ளான்" என்னும் கந்தபுராணக் காப்புச்செய்யுளான் உணர்க. சதாசிவ மூர்த்தியைப் பூசிக்கும்போது ஐந்து திருமுகங்களும், பத்துத் திருக்கரங்களும் உடையவராகத்தியானித்துப் பூசிக்கின்றமை காண்க. தழும்புபடக் குழைத்தது அம்மையார் கம்பா நதியிற் சிவபெருமானைப் பூசித்தகாலம் என்க. இறுகத்

தழுவிக் குழைவித்து முலைத்தழும்பும் வளைத்தழும்பும் படச் செய்தமையால் திறல்கொண்ட கைத்தலம என்றார். சேந்து அழகு எறிப்ப. சேந்து - சிவந்து.

தன் தாளை கிளை ஒன்றைக் குழைத்துப் பணித்ததனால் இறைவன் தோட்குவடு பத்தையும் தழும்பாகும்படி. அம்மையார் குழைத்தருளினர் எனப் பழமொழிப் பொருளை விளக்கியபடி காண்க.

2. உள் ஒளி - உள்ளத்திலிருக்கும் வொளி. உவட்டெடுத்து - பெருக்கெடுத்து. பரந்தாங்கு - பரவினாற்போல. மெய்யடியார்கள் உள்ளத்திலே நிறைந்த சிவஞானவொளி ததும்பிப் பொங்கிப் புறத்தினும் உவட்டெடுத்ததுபோல ஒழுகுகின்ற ஒளியினையுடைய வெண்ணீறு பூசியிருந்தது விளங்கியது. ஞானம் - வெண்ணிறம்: அஞ்ஞானம் - கருநிறம். மட்டித்து - பூசி. உயர்ந்த அடியார்கள் என்றது "முதல்வனது நோன்றாளை அணையவொட்டாது அயர்த்தலைச் செய்விக்கும அவ்வியல்பின உடைய மும்மல அழுக்கை ஞானநீரால்கழுவி அங்ஙனம் அயரா அன்புசெய்யும் மெய்ஞ்ஞானிகளை" என்க. "காமக்கிழத்தியர் வடிவில் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின காமுகரை வசீகரித்து இன்பம் செயயுமாறுபோல, மெய்யுணர்வுடையாரைக் காட்சிமாத்திரையின் வசீகரித்து இன்பஞ்செய்தல் பற்றித் திருவேடத்தைச் சிறப்பித்தார்.

திருவேடத்தின் இயல்பை "தூய வெண்ணீறு துதைந்த பொன் மேனியும", "வடிவிற்பொலி திருநீறும்" எனத் திருத்தொண்டர் புராணத்துக் கூறிய

வாற்றால் அறிக. அடியார்கள் குழுமி, நெருங்கு பொதியில் எனக் கூட்டுக. வேங்கை மகவு - புலிக்கால் (வியாக்கிரபாத) முனிவருடைய புத்திரராகிய உபமன்னியு முனிவர். "பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்த பிரான்" எனத் திருப்பல்லாண்டிற் கூறியமை காண்க. பொதியில் - அம்பலத்தில்: சிற்சபையில். தூயவெண்ணீறு சண்ணித்த மேனியையுடைய அடியார்களின் காட்சி பாற்கடலை ஒத்தது, சிவத்துதி முழக்கு அக்கடலின் ஒலியை ஒத்தது என்க. பாற்கடலின் வேண்டுகோளைப் பிரபுலிங்கலீலை ஆசிரியர் "கண்பிரைந் தொருசேயின் னும் கலுழினும் தனைக்கொடுப்பன், மண்பிரைந் துண்டமாயன் மறுத்திட வலியனல்லன், நண்பிரைந் திறைவனுக்கே நாமிட னுவமென்று, பண்பிரைந் தலை திரண்ட பரிசில்நின் றிடுமக்குன்றம்" எனக் கயிலாயகிரியின் வைத்துப் பாற்கடலைக் கூறினர். இவ்வாசிரியர் அடியார்களின் வெண்ணீறு பூசிய திருமேனியின வைத்துப் பாற்கடலை விளக்கியருளினர். வெண்ணீறு பூசுதல், அரகர முழக்கஞ்செய்தல் அடியார்களுக்குள்ள நெறியெனக் குறித்தமை காண்க. இது தற்குறிப்பேற்ற அணி.

வேண்டுவார் வேண்டுவதே ஈயும் பெருமானைப் பாற்கடல் வேண்டுவார்க்கு அருளாமை வேண்டுதும் எனக் கருதிய நயம் சிந்திக்கத்தக்கது. கேள்வர் - நாயகராகிய சிவபெருமான். ஆட்டு என்றது ஐந்தொழிற் கூத்தை. நாயகராடும் கூத்தினுக்கிசைய அம்மையார் திருத்தாளங்கொண்டு ஒத்திய காட்சி குடந்தைக் கீழ்க்கோட்டத்தில் (நாகேச்சுரசுவாமி கோயிலில்) காணலாம். 'பொதியில் நாயகர் ஆட்டு'

எனக் குறித்ததைப் பொதியில் மலைச்சாரலில் உள்ள திருக்குற்றாலத்துச்சித்திரசபை என இரட்டுறமொழிந் தும பொருள்கொள்ளலாம். ஸஹ பாணி சப்பாணி என்ருயிற்று என்பர். ஸஹ - கூட: பாணி - கை.

3. ஐவகைச் சுத்தி - சிவபூசையில் ஐந்து வகை யாகச் செய்யப்படும் சுத்தி. பூதசுத்தி - தானசுத்தி - திரவியசுத்தி - மந்திரசுத்தி - இலிங்கசுத்தி என்பன. சிவபூசாபத்ததியில் விரிவாகக் காண்க. வான் - சிறந்த. அருகு அன்பு பூப்ப. அல்கியது - சுருங்கியது. துவாதசாந்தத் தலம் - சிரசின்மேல் பன்னிரண்டங் குலம் கடந்த எல்லை. தவிசு - ஆசனம். இழிந்து - இழிறக்கிக் கொணர்ந்து. சிவலிங்க நாப்பண் - சிவ லிங்கத்தின் நடுவண். ஆவாகித்து - மூலமந்திரத் தால் ஆவாகனம்செய்து.

அவ்வும்பன் - அந்தச் சிவலிங்கப்பெருமானுகிய தேவன்: அதாவது சதாசிவதேவநாயனர். நயனச் சுடர் எதிர் - கண்களாகிய சூரிய சந்திரர்களுக்கு எதிராக. உற - பொருந்த. குவிந்து அலர்தல் - குவி தலுக்குத் தேனு முத்திரையும, அலர்தலுக்கு மகா முத்திரையும் எனக்கொள்க. மான - ஒப்ப. முத்திரை கொடுத்து - ஆவாகனம செய்தபின் முத்திரைகள் கொடுத்து. அவை: ஆவாகனம், ஸ்தாபனம், சன்னி தானம், சன்னிரோதம், அவகுண்டனம், சகளீ கரணம், பரமீகரணம். அமிருதீகரணம் என்னும் இவைகட்குரிய முத்திரைகளை என்க. பூசைமுற்றும் - பூசை முழுவதும். சைவமுறை ஆற்று - சிவாகமவிதி யின்படி செய்யும். கைப்பங்கயம் - கைகளாகிய தாமரை மலர்கள். சேப்ப - சிவக்கும்படி. ஆநகு : அசை.

அமைத்து, நிறைத்து, மேல்நோக்கி, குவிந்து, ஏற்று, குவிந்திழிந்து, ஆவாகித்து, கொடுத்து, ஆற்று, பங்கயம் எனக்கூட்டுக.

4. கடவுட் பொலம்பூமி - தேவர்கள் வசிக்கும் பொன்னுலகம். கடையுகப் பெருவெள்ளம் - ஊழிப் பெருவெள்ளம். பூந்தராய் - சீகாழிக்குள்ள பன்னிரு பெயர்களுள் ஒன்று. கௌணியர்கள் குலமணி - கௌண்டிணிய கோத்திரத்தில் அவதரித்தருளிய திருஞானசம்பந்தமூர்த்திநாயனார். முடவு - வளைந்த. கண்ணி - தலையிற்சூடும் மாலை. மோலி - மவுலி: கிரீடம். சைவமுறை நெறிச்சோகாப்பவன் - சைவ முறை நெறியாகிய சோலைக் காப்பவன். சோ - அரண்: மதில். முழுவதும் சோகாப்ப - யாவும் துன்புற. சோகாத்தல் - துன்புறல். சிலையோடு புலும் - விற்கொடியோடு புலிக்கொடியும். விற்கொடி சேரற்கும், புலிக்கொடி சோழற்கும் உரியது. அடவிக்கு அளித்தல் - காட்டிற்குக்கொடுத்தல்: என்றது, அவ்விரு கொடியையும் உடைய சேர சோழரை வென்று, அவர்களை நாட்டினின்று காட்டிலோடி ஒளிக்கச்செய்தல் எனபது கருத்து. தமிழ்க்குரிசில் - பாண்டியன்: ஈண்டு நின்றசீர் நெடுமாறனாகிய கூன் பாண்டியன் என்க. நீறு இட - திருவெண்ணீற்றைப்பூச. கையர் - கீழோர். உள்நீறிட - மனம்வெந்து சாம்ப. தடவு - பெருமை. பொன்வள்ளம் - பொற் கிண்ணம். குலமணிக்கு ஊட்டு செங்கை எனக் கூட்டுக.

5. கிளவி - சொல். தவக்கோட்டிய - மிகக் கோணலாக வளைந்த. கழை - கரும்பு. எயிறு - பற்கள்.

சே அரி - சிவந்த வரி. அரவிந்தம் - தாமரை. மெலித்த - மெலிவித்த; விவ்விகுதி தொக்கது. முகத்தான் மெலிவித்த அரவிந்தமும் மூரலால் மெலிவித்த முல்லையும், கண்ணால் மெலிவித்த குவளையும் எனக் கூட்டுக. தளிர்பொங்கி எழு பிண்டியும் எனக் கூட்டிக் கொள்க. பிண்டி - அசோகு. மாழை - மா. சோகாந்து - துன்புற்று. அணையா - சேர்த்து. சமர்த்திண்மை - போரிடும் வன்மை. இடையாத - தோல்வியடையாத. வில் என்றும் - கழையை வில்லென்றும். அம்பு என்றும் - அரவிந்தம் முதலியவற்றை அம்பென்றும். உதவி - அவைகட்குத் தந்து. ஒன்றொடு ஒன்றை - ஒருகையோடு ஒருகையை. தாக்கியாங்கு - தாக்கினாற் போல. அங்கை - அகங்கை. அம்பிகை திருக்கரங்களிலே கருப்புவில்லும், பஞ்சபாணமும் உண்மையால் இவ்வாறு கூறினர். தணிகைப்புராணம கடவுள் வாழ்த்து அம்பிகைதுதியாலறிக.

6. பொலங்தொடி - பொன்வளையல். தத்தி - தாவி. சிவக்கும் அரிக்கண் - செவ்வரி பரந்த கண். நிழற்றும் - நிழலைச் செயயும். நிழற்றுணை - கண்களின் நிழலாகிய இரண்டு சாயல்கள். நவ்வி மறி - மான்கன்று. உறவாட - அந்தநவ்விமறிகள் ஒன்றோடொன்று நட்புக்கொள்ள. மறிந்து மறிந்தும் உற கவவி கவவி - மறுபடியும் மறுபடியும் பொருந்த அகத்திட்டு அகத்திட்டு. கவவு - அகத்திடுதல். உயிர்த்து - பெற்று. சுழலல் - சுற்றல். கவவிக் கவவிக் கொட்டுக என இயைக்க. அருள்கூர் - அருள்மிகுந்த.

7. அரக்கு - சிவப்பு. கனியாக நின் அதரத்தினையும், அமிழ்தேந்துவள்ளமென்ன தனத்தினையும, தளிர்

என்று மேனியையும் பார்த்துத்துய்த்திட வாழுறும கிளிச்சிறை தைவரும் கை எனக் கூட்டுக. சேயொளி - சிவந்த ஒளி. அதரம் - கீழ் உதடு. முருக்கு அலர் - முருக்கமபூ. வள்ளம் - கிண்ணம். தாளத் தொடை - முத்துமாலை. துணைத்த தனம் - இரண்டாகிய தனங்கள். பரக்கும் - பரவிய. பம்பிய-நிறைந்த. துய்த்திட- உண்ண. குருச்சிறை - ஒளி பொருந்திய சிறகு. தைவரும் - தடவும்.

8. இசைப்பாட்டினையுடைய வண்டு. முண்டகம்- தாமரை. நாண்மலர் - அன்றலர்ந்த மலர். மூரி - வலிமை. முண்டகமலர் மணித்தவிசு. மணித்தவிசு - சனம். தவிசு - பீடம். மூவிரு செவ்வுருவம்- அறுமுகக்கடவுளின் ஆறுவிதச் சிறப்புள்ள வடிவம். தழங்கு - ஒலிசெய்கின்ற. முலையாகியகுவடு. குவடு - மலை. ஆற்றகிலாது - ஆற்றமுடியாமல். கில்: இடைச் சொல்; ஆற்ருது என்றபடி. அழுங்கி-வருந்தி. கங்கை உள் வெள்கி - கஙகாதேவி உள்ளத்தில் வெட்கம் அடைந்து. விளர்ப்ப - வெளுப்படைய. இப்பாடலில் கூறியவரலாற்றைக் **கந்தபுராணம், கந்தர் கலிவெண்பா** இவைகளிற்காண்க. கயிலாயத்திலே சிவபெருமான் கண்களினின்று வெளிப்பட்ட அக்கினிப் பொறிகள் ஆறனையும் அக்கினிக்கடவுள் தாங்கி விடுப்ப அப் பொறிகளைத் தாஙகலாற்ருமல் வருந்திச் சரவணப பொய்கையில் விடுத்த கங்கை மனம் நாணி அசைந்து உடல் வெளுப்படைய என ஒட்டுக. கங்கையின் இயல் பாகிய வெண்ணிறம் வெட்கத்தால் விளர்ப்படைந்த தாகக் கூறியமை காண்க. அம்மையார் முருகக் கடவுளுக்கு முலைப்பாலருத்தியமை கூறப்பட்டது.

9. மதுகரம் - வண்டு. துளப உரத்தினன் - திரு மால். உரம் - மார்பு. துளபம் - திருதுழாய்மாலை. மட்டு - தேன். மறைமுனி - பிரமதேவன். மணிமுடி - இரத்தின கிரீடம். குனிதர - வணங்க. அரசிற்பொலி புத்தேள் - இந்திரன். முளரி-தாமரைமலர். விண்நதி - ஆகாயகங்கை. தருமலர் - கற்பகமுதலிய தருக்களின் மலர்கள். நச்சி - விரும்பி. நவை அறு விதிமுறை - குற்றமற்ற சிவாகமநெறிமுறையில். சொரிதர - இட்டு அருச்சிக்க. இதம் - நன்மை. பரசுகம் - மேலான இன் பம். அம்மையார் பேரின்ப வடிவினள் என்க.

10. விழி அளி-விழிகளாகிய வண்டுகள். அவனி- பூமி. அறம் எவையும் - முப்பத்திரண்டு தருமங்களை யும். பதுமபதம் - தாமரைமலர் போன்ற பாதங்கள். தெளிந்த வேதவொழுக்கம் மிக்கவர் உள்ளத்தை விளங்கச்செய்த. முருகு - வாசனை. மது - தேன். கோதாய் - மாலை போன்றவளே. கோதை - மாலை. பெண்களை மாலைஎனச் சொல்வதுமரபு; திருக்கோவை யார் முதற்செய்யுள் காண்க. பழிச்சு - துதிக்கின்ற. இருமையும் - இம்மை மறுமைப்பயன்களையும்.

## 5. முத்தப்பருவம்:

1. புரிசை மூன்றும் - திரிபுரங்களையும். ஒரு பதத்தில் - ஒரேசமயத்தில். இறுத்து - அழித்து. பரமானந்தப் பெருவாழ்வை-சிவபெருமானை. நிகர்ப்ப- ஒப்பாக. நுதல் - நெற்றி. சிறு வெண்மதி கிடந்த நுதல் எனவே எட்டாம்பிறைச் சந்திரனைப் போன்ற. புருவமாகிய வில்லை வளைத்து. கோட்டி - வளைத்து. மெய்த்து - மெய்த்தன்மை பொருந்தி. மதர்த்த கண்க

ளாகிய அம்பைத் தொடுத்து. வெளிக்கொண்டு - வெளிப்பட்டருளி. மும்மை மலச்சேரா அழல - ஆணவம கன்மம் மாயை எனும் மும்மலங்களாகிய அரண் அக்கினிபற்ற. புனமூரல் - புன்னகை. முகிழக்கும் - அரும்பும். முருகு - மணம்.

பரமானந்தப் பெருவாழ்வை நிகர்ப்ப மூரல் முகிழ்க்கும் எனக் கூட்டுக.

2. கருப்புச்சிலை - கரும்புவில். வனசக்கணை - தாமரைமலர்க்கணை. மன்மதனுடைய அம்புகள் ஆகிய மலர்களாவன: தாமரை, மாம்பூ, அசோகு, முல்லை, நீலோற்பலம் என்பன. "நினைக்கு மரவிந்தம் நீள்பசலை மாம்பூ, அனைத்துணவு நீக்கும் அசோகு— வனத்திலுறும், முல்லை கிடைகாட்டும மாதே முழு நீலம, கொல்லும் மதனம்பின் குணம்" என்னும் வெண்பா மன்மதனுடைய அம்பின் தொழிலைக் குறித்தல் காண்க. நனை - அரும்பு. கணை - அம்பு. பணிக்கும் - பணியச் செய்யும்: விவ்விருதி தொக்கது. எம் குரிசிலை - எம் அரசனாகிய மன்மதனை. கண் திளைத்த எரியால் - கண்ணாகிய நிறைந்த அக்கினி யால்: என்றது நெற்றிக் கண்ணாகிய அக்கினியால் என்றபடி. படப்பொருத - அழியும்படி போர்செய்த. சிவமாகிய வாழ்வை. மருட்டி - மயக்கி. பணிப்பல் - பணியச்செய்வேன். தளவம் போல் - முல்லையரும்பை யொப்ப. முறுவல் - நகை. எம்குரிசில் என்றது முல்லையரும்பின் கூற்று. என்னெடும் என்று முடுக் கொடுத்துப் பிரித்தோதியது முல்லையே.

3. பிதிரும - சிந்தும். பொறி - புள்ளி. மடுத்து - குடித்து. பெருந்தேன் - மிக்கதேன். தாது - மகரந்தப்

பொடி. கமல அலர் - தாமரை மலர். தனக்கும் என்றது வதனமாகிய மதியைக் குறித்தது என்க. உளக்கமலம் - இதயதாமரை. வயம் ஆக்கி - வசப் படுத்தி. கலப்பான் - சேரும்பொருட்டு. பான் வினை யெச்சம். எழுந்தால் என - எழுந்தாற்போல. வதனம்- முகம். அரும்பும் நிலா - தோன்றும் நிலா வொளி. நிலா என்றது நகையொளியை. தாமரைக்குப் பகை சந்திரன். முகமதியின் எழுந்தநிலா பெருமான் உளக் கமலந்தனையும் மலர்த்தி வயமாக்கியது என்பது ஒரு நயம்.

4. வரிவண்டு - வரிகளையுடையவண்டு. முரலா- ஒலித்து. தொடையல் - மாலை. குழாம் - கூட்டம். பழுது நிலவா - குற்றமில்லாத. பரிசு - தன்மை. மணி இதழக்கபாடம் - அழகிய உதடாகிய கதவு. உருவம எழுதும் வினைஞர் - சித்திரகாரர். தொழிற்கு அடங்கா ஒளி என்றது ஒளியை எழுதுதற்கு முடியாதகாரணம் பற்றி. ஒள்ளொளி - மிகக ஒளி. அச்சுடரை - அந்த விழிச்சுடரை. ஏக்கற்று - விரும்பித் தாழ்ந்து நின்று. அமையம் . சமயம்.

பரிசு நோக்கி, சிறிதே திறந்து, ஒளி காட்டி, எழுந்து, வயமாக்கி, அமையம் பார்த்திருப்ப, அடி மைக் கொளும் நகை எனக் கூட்டுக.

5. இகந்த மனத்தால -
பெருமானை மதியாது நீக்கினமை. இமையோர் - தேவர். வெருவ - அஞ்ச. எழும காளம் - ய ஆலகால விடம். பவளம்போன்ற அழகிய வாய.

தவாது ஓங்க - கெடாது உயர்ச்சியுற்றிருக்க. தழங்கும் - ஒலிக்கும். சிறு மறி மான் பேரொலி முழுதும் தாங்கும் செவி: முரண்டொடை. ஓங்கத் தாங்கும் செவி என்க. மான - தாருகாவனத்து முனிவர்கள் ஏவிய மான் என்க. துனறிய - நெருங்கிய. உரைப் பாண் அமிழதப் பெருக்காறு - சொல் இசையாகிய அமிழ்த வெள்ள நதி. காளம் பருகும் திருவாய்க்கு எயிற்றின் ஊறும் அமிழ்து மருந்து; பேரொலி முழுதும் தாங்கும் செவிக்கு உரைப்பாணமிழ்தம் மருந்து. மாஞெலியாலாகிய வருத்தமுற்ற செவிக்கு அந்த வருத்தம் நீங்க மருந்து. ஊட்டி - நுகரச்செய்து. களி கூர்ந்து - மகிழ்ச்சிமிக்கு. எழிலாகிய கடல். ஆலகாலம் உண்ட வரலாறும், தாருகாவன முனிவர் மானை ஏவிய வரலாறும் காண்க.

6. அசும்பு - துளி. வாய் நீர் வழிந்தோட என்றது குழவிப்பருவத்தைக் குறித்தற்கு. ஐங்கரக் களிறு - விநாயகக்கடவுள். ஆகத்திடை - மார்பினிடத்து. கொண்டல் நாப்பண் - மேகத்தின் நடுவிடத்து. தடித்து என - மின்னல்போல. பணைத்து - பருத்து. பொற்றசும்பு - பொற்குடம். இரு களிறு - இரண்டு யானைகள். மத்தகம் - யானையின் மண்டை. மயிரின் தண்ணிய ஒழுக்கு - மயிரொழுங்கு; ரோமாவலி. தடவுக் கை - பெரிய துதிக்கை. சுழிய - சுற்றி வளைக்க. விசும்பு - மேகம்: ஆகுபெயர். நகை விரித்து - புன்னகைசெய்து. ஒல்லை - விரைந்து. வெகுளி - கோபம். முத்தாடி - முத்தமிட்டு. பச்சைநிறமுள்ள அம்பிகை மேனியைக் கொண்டலாகவும், செந்நிறமுள்ள விநாயகரை மின்னலாகவும் கொள்க. சிறுபருவ விளையாட்டைக் குறித்துக் கூறியபடி: தாயினிடத்து மகவு

விளையாட்டு. தந்தையார் மடியில் நின்று விளையாடிய விநாயகக்கடவுள் சிறுபருவ விளையாட்டை அதிவீர ராமபாண்டியர் நைடதம் காப்புச்செய்யுளில் குறித்தமை சிந்திக்க.

7. சேடு - பெருமை. இனமணி - கூட்டமாகிய இரத்தினங்கள். இலைஞாங்கர் - இலைபோலத் தகட்டு வடிவமாயிருக்கின்ற வேல். ஞாங்கர் - வேல். நுதி - நுனி. நாட்டம் - கண். வெள்ள அமிழ்து தேக்கிடவும். தேக்கிட - நிறைக்க. அளகக்காடு - கூந்தலாகியகாடு. மயல்பூட்டு - மயக்கைச்செய்யும். கன்னியரிடை - கன்னியரிடத்து. மட்டுண்டு - எல்லைக்குட்பட்டு. தட்டுண்டு - தடைப்பட்டு. பட்டு இறும் காளையரின் மாழுநர் என - (அறிவு) கெட்டு முறியும் காளைப் பருவத்தை உடையவருள் மயங்குநரைப்போல. மாடகம் - முறுக்காணி. இறுதல் - முறிதல். மாழ்குதல் - மயங்கல். மொழியாகிய அமிழ்தம். ஊட்டவிட்டு - (நீ அக்கினிக்கு) உண்பிக்க அதனைவிடுத்து. மோடு-பெருமை. கோட்டுக்குவட்டை நிகர் - சிகரத்தையுடைய மலையையொத்த. ஏக்கறாஉம் - விரும்பிப் பெறத் தாழ்ந்து நிற்கும்.

அருட்பார்வையாகிய அமிழ்தம் தேக்கிடவும், நீக்கிக் கன்னியரிடை மாழுநரென மொழியமிழ்தம் ஊட்டவிட்டு முலைமுத்தை அமிழ்தம் என்று ஏக்கறாஉம் கிள்ளை என முடிக்க.

8. மடல் - இதழ். படலை - மாலை; தொடுத்த மாலை என்க. மணிமார்பினன் - கௌத்துவ மணியை அணிந்த மார்பையுடைய திருமால்.

அண்டவாணர் - தேவர். வளைகடல் புனல்மீதெழும் விடம் என்றது கடல் என்னும் ஒப்புமைபற்றி: விடமெழுந்தது திருப்பாற்கடல் கடைந்தபொழுது. வாய் அமிழ்தம் - வாயூறலாகிய அமிழ்தம். பருகுவித்து - அவ்விடத்தின் தீமை கெடும்படி உண்ணுவித்து. விளியாதவண்ணம் - கெடாதபடி. கொங்கையாகிய அழகிய சஞ்சீவிமலை. சஞ்சீவி - உயிர்தரும் மருந்து. பங்கயச்செல்வி - திருமகள்.

உமாதேவியார், சிவபெருமானுடைய திருமேனியிற் பாதியாயினமைக்குக் காரணம் கற்பித்தபடி.

9. சுறவு ஏறிய கொடி - மகரக்கொடி. சுவை நீள் சிலை - கருப்பு வில். மலர் ஆர் பகழி - மலர்களாகப் பொருந்திய அம்புகள். துரக்கும் - செலுத்தும். மதக்கொடுவேள் - கொடிய மன்மதனாகிய வேள். வேள் என்னும் பெயர் முருகக்கடவுளுக்கும் உரிமையின் மதவேள் என்றார். இற - கெட. நுதல் விழி - நெற்றிக்கண். அழல் - அக்கினி. எரிபோல் பொலிவிடு சடை என்றது செஞ்சடையாகலின். வெறி - மணம். திலதம் - சிந்துரப்பொட்டு. உளம் வட்கி - உள்ளம் நாணி. நறு - தேன். இதழி - கொன்றைமலர். நிறுவி - நிறுத்தி. பொருவ - ஒப்பாயிருக்க. முறி - தளிர்.

10. பெட்பு - விருப்பம்; அன்பு. மருஆர் தகரம் - மணம் பொருந்திய மயிர்ச்சாந்து. அளி - வண்டு. மணத்த - மணஞ்செய்கின்ற. மருவாது - பொருந்தாது. இருள் - அஞ்ஞானம். ஒறுக்கும் - தண்டிக்கும். வைப்பிடம் - சேமிக்குமிடம்.

## 6. வாரானைப்பருவம்:

1. அரில்கொள்ள - பின்னுதல்செய்ய. துறுத்தனைய - நெருக்கிவைத்தாற்போல. வெள்ளிய சிறையையும் பவள வாயினையும் உடைய. ஓதிமத்திரள் - அன்னப்பறவையின் கூட்டம். சிலம்பு - காலணி. எள்ளி - இகழ்ந்து. பொலிவு - சிறப்பு. எய்யாது - முன்பு அடையாது. கற்க - சிலம்பொலியினையும், நடைப்பொலிவினையும் கற்றுக்கொள்ள. இம்மை மறுமையாகிய பெரிய வாழ்வு. வாழ்வு - செல்வம் என்றபடி. வேட்டவர்க்கு - விரும்பிய மெய்யடியார்களுக்கு. உள்ளி - நினைந்து. சூழலிடை - கூட்டத்தில். ஏய்ப்ப - ஒப்ப. மதியம் ஊர்ந்துவரல் ஏய்ப்ப ஒளிமா மணிகள் இருகரையிலும் அள்ளிச் சொரிந்து உலவு பாலி என்க. பாலி - பாலாறு. ஈண்டு மணி என்றது முத்துக்களை. பாலிநாடு - பாலாற்று வளத்தையுடைய தொண்டைநாடு. புன் மூரல் - சிறுநகை.

2. தொடை - மாலை. கார் - மேகம். தோகை - மயில். தீங்கிளவி - இனியசொல். கட்கடைப்பார்வை - கடைக்கண் நோக்கம். மெய்யொளி - உண்மை ஞானவொளி. ஓலிட்டு (ஓலமிட்டு) - அலறி. நேடி - தேடி. வில் உமிழ் - ஒளியினைச்செய்யும். குரூஉ - நிறம் பொருந்திய. பருமம் - பதினென்கு கோவை மணிவடம். மீமிசை - மேல். வாடிவர - துவள. மை - கரிய. அளி - வண்டு.

நாடிவர, ஓடிவர, பாடிவர, கூடிவர, நேடிவர, வாடிவர வரும் அமுதாம்பிகை.

3. சுடிகை - உச்சிக்கொண்டை. பணிக்குழாம் - பாம்பின் கூட்டம். பை - படம். தோகை, ஈட்டம் - மயிலின் குழாம். இயலையும நடையையும் வேட்டு. இயல் - சாயல். வேட்டு - விரும்பி. வல் உறழ் கொங்கை-சூதாடுகருவியையொத்த நகில். கொங்கை: அன்மொழித்தொகை. மருங்கு - பக்கம். உற - பொருந்த. வேறு அறியமாட்டாது - இது மயிலுருவ மென்றும், இது நின்னுருவமென்றும் பிரித்தறிய மாட்டாமல். மருளும் - மயங்கும். நகை - முறுவல். தேற்றி - மயக்கம் நீங்கும்படி தெளிவித்து. "இருக் காதியான நான்கும் ......... அறிவரிய" "வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்தகன்ற நுண்ணியனே" என வும், "அல்லையீதென அல்லையீதென மறைகளும் அன்மைச் சொல்லினால் துதித்திளைக்கும் இச்சுந் தரன்" எனவும் கூறியவாற்றால் இறைவனினின்றும வேறாகாத இறைவியையும் அறிவரிய இயல்பினை யுடையாள் என்றார். அல் உமிழ் - இருளைச்செய்யும். பொங்கர் - சோலை.

4. வயிர் - ஊதுகொம்பு. ஆவணந்தொறும் - வீதிகள்தோறும். திருக்கயிலாயத்திலுள்ள அயிரா வணத்துக்கு இரண்டாயிரம் கொம்புண்டு என்க. அயிராவணம் - சிவபெருமானுக்குரிய யானை. இத னையே சுந்தரமூர்த்தி சுவாமிகள் ஏறிக் கயிலைக்குவர அருளினர். திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் அயிராவதத்தைப்பற்றிப் பட்டினத்தடிகள் குறித் தமை காண்க. மருமத்து இரு மருப்பினால் - மார்பி லுள்ள இரண்டு (நகில்களாகிய) கொம்புகளால். செயிரா - செயிர்த்து (கோபித்து). அணங்கினை - தெய்வத்தன்மையை. தெறூஉம் - அழிக்கும். மலம்

களிறு ஐந்தையும் - ஆணவம், கன்மம், மாயை, திரோதாயம், மாயேயம் ஆகிய யானைகள் ஐந்தனையும். இறச்செற்றிடும் - இற்று ஒழியச்செய்யும். பயிர் ஆம் வண்ணம் - பயிர்கள் செழித்தோங்கும்படி. பனி மால் அடுக்கல் - இமயமலை. நுந்தை - உன்பிதா. வெண்ணிறமுடைமையால் அயிராவணத்தைப் பனிமலை பின்வருதல் ஏய்ப்ப என உவமித்தார். பரிந்து - அன்புகொண்டு.

ஆண்மையும், வீரமும், நடையும் நோக்கி என இயைத்துப் பொருள் கொள்க. மலம் ஐந்தையும் களிறாக உருவகம் செய்தார். பதநடை - தன்மை என்க. இரண்டாயிர கொம்புடையம் தன்னை ஆளுதலுடைய தலைவனை இரண்டு கொம்புகளால் ஆளும் திறத்தினள் அம்மையார் என அயிராவணத்தின் கருத்தைக் குறித்தமை காண்க.

5. விந்தையங்கிரி - விந்தியமலை. இகலி - மாறுபட்டு. வீந்த - அழிந்த. வெள்ளிவேதண்டம் - கயிலாயமலை. அரக்கன் என்றது இராவணனை. ககனம் - ஆகாயம். அண்டமார்க்கம் - ஆகாயநெறி. இரண்டு சுடர் - சூரிய சந்திரர். ஆதாரம் - பற்றுக்கோடு. தன் என்றது மேருவை. தளர்ந்து ஒசியாது - தளர்ச்சியடைந்து துவளாமல். உழக்க - கலக்க. செம்மாந்து - இறுமாந்து. விம்மி - பருத்து. எள்ளும - இகழும. அம் தனச்சிகரி - அழகிய நகில்களாகிய மலை. அருவி நித்திலம் - அருவியாகிய முத்துமாலை.

விறின்மையும், மென்மையும், வன்மையும் நோக்கிக் களிகூரும் மேருவை எள்ளும் தனச்சிகரி எனக்

கூட்டுக. விந்தியமலை, கயிலைமலை. மந்தரமலைகளின் நிலையை எண்ணி யெண்ணிச் சிந்தை களிகூர்ந்த மேருவைச் சிவபிரான் ஒருகையால் வளைத்தனர். அச் சிவபிரானுடைய ஒருபது கரங்களும் ஒருசேர நித்த லும் உழக்கச் சிறிதும் தளராமலும், துவளாமலும் செம்மாந்து பருத்து நின்று அம்மையாருடைய நகில்மலைகள் அம்மேருவை எள்ளின என்றார்.

6. தெய்வத் தன்மையுள்ள சுருதி. செம்மற் கோரனாகிய பிள்ளை. குழைத்த வலி - குழை பெற்றி - தன்மை. கம்பா நதியில் இறைவரைப் பூசிக்குங்கால் தழுவிக் குழையச் செய்த வலிமை. நகக்குறி - இறைவர் அம்மையார் தனத்திற் செய்த நகச்சுவடு. பல் கதுவ - பற்களால் பற்ற. வை - கூர்மை. திருமுலைப்பாலினோடு சிவஞானமும் குழைத் துக் கொடுத்த வரலாறு திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணம் நோக்கியறிக.

திருமுலைப்பாலைப் பொன்வள்ளத்தில் கறந்து கொடுத்தருளியமைக்குக் காரணங் கற்பித்தவாறு.

7. குஞ்சி - ஆண்பால் மயிர்; குடுமி. தொடி - வளையல். கறங்க - ஒலிக்க. ஒசியும் - துவளும். சிறு மருங்குல் - சிற்றிடை. நுடங்க - அசைய. ஏங்க - ஒலிக்க. அணங்கும - வருந்தும். மணிநூபுரம் - மணி களால் இழைக்கப்பட்ட நூபுரம் என்னும் காலணி. பஞ்சி - செம்பஞ்சுக்குழம்பு. இமையோர் - தேவர். மோலி நிரை - முடிகளின் வரிசை. பதுமை - இலக்குமி. மஞ்சு இவரும் பூங்குழல் - மேகத்தை

யொத்த அழகிய கூந்தல். இவரும் - விரும்பும எனினு மாம். சுவடு - தழும்பு. தூங்க - தங்க. பாதச்சுவட்டைக் காணப்பெற்ற மகிழ்ச்சியால் சுவடுதொறும். பன்முறை இமையோர் மோலிபுரண்டன என்றார்.

கறங்க, நுடங்க, ஏங்க, பப, புரள, தூங்க, வருக என முடிக்க.

8. கடி - மணம். கடுக்கை - கொன்றை. பேர் அண்டகடாகப் பரப்பு - பெரிய அண்டகடாக மாகிய பரப்பு. பைதல் மலநோய்ப் பசி - துன்புறுத்தும் ஆணவமல நோயாகிய பசி. இரிய - கெட்டோட. அயிற்றி - உண்பித்து. அயிலல் - உண்ணல். பரமா னந்தமாகிய வீடு. தெவிட்டா - நிறையாத. மடி - நோய். அயராது - சோர்வடையாமல்.

9. களப்பணி - விடத்தையுடைய பாம்பு: காளம் களம் எனக் குறுகியது. கள்ளத்தையுடைய அணி யாகிய சந்திரன்: கள்ளம் களம்: இது தொகுத்தல். நெருங்கி. கோது - குற்றம். பாமபால் அச்சக்குணமும், சந்திரனல் நாணமும் கொடுக்கும். குறியேம் - குறிக்கமாட்டோம். குறித்தல் - எண்ணல். சாயலால் பாம்பு ஒளிக்க எனவும், அல்குலால் சந்திரன் ஒளிக்க எனவும் கொள்க. மயில்போலும் சாயல். அராப்போலும் அல்குல். மயிலைக்கண்டு பாம்பு ஒளித்தலும், அராவைக்கண்டு சந்திரன் ஒளித் தலும் இயல்பு. அளிகள் - வண்டுகள். வாது - கலகம்.

10. அயில் கண் தனை எனப் பிரித்துணரக்க. அயில் - வேல். அஞ்சலித்து - கும்பிட்டு: கைகூப்பி.

கருணை ஆழி - கருணைக்கடல். ஆவித்துணை - உயிர்த் துணை. விடம் துயில் கண்டன் - ஆலகாலவிடம் பொருந்திய கண்டத்தையுடைய சிவபெருமான். சிவ பிரானை அம்பலத்தாட்டுதல் முற்கூறப்பட்டது: "சங் கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளும் மறைக்கோவும் தழல்கால் சூலம், அங்கேந்து மம்மானும் தத்தமது தொழிற்றலைநின் றுற்றச்செய்தே, பங்கேந்தும் பெரு மாட்டி விழிகளிப்ப இருமுனிவர் பணிந்துபோற்றக், கொங்கேந்தும மணிமன்றுட் குனித்தருளும் பெருவாழ் வைக் குறித்து வாழ்வாம்" எனக் காஞ்சிப்புராணம் கடவுள் வாழத்தில் இவ்வாசிரியர் கூறியருளியமையும் காண்க. குதலை - பொருள் விளங்காவுரை. கண்டு - கற்கண்டு. அனையர் - அன்னையர்: தொகுத்தல். கோகிலம் - குயில். மயில் கண்டனைய - மயிலைக் கண்டாலொத்த.

## 7. அம்புலிப்பருவம் :

*1.* அம்பிகையைக் குறிக்கும்போது : பொன் - பொற்கட்டி. வனமரவங்கள் - மிகுதியாகிய குங்கும மரங்கள். மரவம்-குங்குமமரம். மால் அரி-பெரியசிங்கம். களிறு இனம் - யானைக்கூட்டம். பொரும் - போர் செய்யும். பொங்கும் - விளங்கும். மலைவாய் - இமயமலை யினிடத்தில்; வாய் ஏழனுருபு. பொன் அம்சிலம்பு - பொன்னாற்செய்த அழகிய சிலம்புஎன்னும் ஆபரணம். சிலம்பு-காலணி. அடி - பாதம். புலம்பு உற சூழ்தல் - ஒலிக்கும்படி சூழ்ந்திருத்தல். சூழ்தல் - வளைதல். மிடையும அங்கம் மலம் அயர - (உயிர்களைச்செறிந் திருக்கும்) களங்கமாகிய ஆணவமலம் சோர்வடைய. குவலயம் - பூமி. களி தூங்க - களிப்பில் தங்கவும.

ஒளிக்கதிர் - ஞானவொளி. பெருமான் - பெருமையை யுடையோனாகிய சிவபெருமான். வேள் எனும் குழகற்கு - வேள் என்னும் பெயரையுடைய முருகக் கடவுள் என்க.

சந்திரனைக் குறிக்கும்போது: பொன் - இலக்குமி; பொன்னிறமுமாம். வளம் மரவங்கள்-அழகிய கற்பக மரங்கள். மால் அரி - பெரிய உச்சைசிரவமாகிய குதிரை. களிறு இனம் - களிற்று மீனினங்கள். அலைவாய் - கடலினிடத்தில். பொன் அம் சிலம்பு அடி - அழகிய மேருமலையின் அடி. புலம்பு உற சூழ்தல் - வருத்தமுறச் சூழ்ந்துவரல். மிடையும் அம் கமலம் அயர - நெருங்கியிருக்கும் அழகிய கமலங்கள் தளர்ச்சியடைய; குவிய என்றபடி. குவலயம் - குவளை மலர். ஒளிக்கதிர் - ஒளியாகிய பிரகாசம். பெரு மான்- பெரிய (களங்கமாகிய) மான். வேள் எனும் குழகன்- வேள் என்னும் இளமைப்பருவத்தையுடையமன்மதன். வேள் - விருப்பத்தைச் செய்பவன்; விருமபத்தக்கவன் எனினுமாம்.

கொன் - பெருமை. கோமளம் - அழகு. அன்பு ஊற்று எடுப்ப - அன்பானது மேலும் மேலும் பெருக் கெடுக்க.

2. மண் தலம் புகழாத வன்பு அடும் செவ்வியில் -உலகம் துதிக்கப்பெறாத (ஆணவமலத்தின்) வலிமையை ஒழித்தற்குரிய பருவத்தில். செவ்வி - பருவம். மாண் தவரை உச்சிமீது வயங்கிய கரம் சேர்த்தி - மாட்சிமை பொருந்திய தவத்தினராகிய அடியவர்க்குச் சிரத்தின்மேல் விளங்கிய கையைக்

கவித்துவைத்து: உச்சிமீதுகரம்சேர்த்தலாவது; சத்த குருவில் அம்பிகையும் ஓர் குருவாதலால், அடியவர் கட்கு அவள் தீட்சை புரியுங்காலத்து அஸ்த மஸ்தக சையோகம் செய்தல் என்க. ஆணவ இருட்குழாம் மாற்றி - ஆணவமலமாகிய இருட்குவியலை ஒழித்து. ஆணவஇருளிற்குச் சத்திகள் பலஆதலின் "ஆணவ இருட்குழாம்" என்றார். நல் பசு மெல் பயிர் கண்டு அகம் மகிழ்ந்து நெடு வான் உற - நல்ல உயிர்களாகிய மெல்லிய பயிர்கள் தெரிசித்து உள்ளே மகிழ்ந்து உயர்ந்த பெருமையாகிய கதியை அடைய. விளைந்து ஒளி கலந்த மணி கான்ற கதிர் நீள் கடி நாறு தன் அடி வணங்க எளிவந்து-உண்டாகிய ஒளி பொருந்திய மணிகள் கக்கிய பிரகாசம் மிகுந்த வாசனை உண்டா கின்ற தன் பாதத்தை வணங்க எளிதாக வந்தருளி. மீன் கண் அம்மாதர் புடைசூழ மேவி - மீன்போலும் அழகிய கண்ணையுடைய அரம்பையர் பக்கமே சூழ்ந் திருக்கப் பொருந்தி, ஈர் எண் கலை பொலியும் மெய் மையில் காட்டும முறையால் - பதினாறு கலைகளின் விளக்கமும் உண்மையிற் காட்டுகின்ற முறையால் என்க. நால் ஈரெண் கலை எலக்கொண்டு அறுபத்து நான்கு கலைகள் எனக் கூறலுமாம். சோடசகலைகளா வன: அகாரம், உகாரம், மகாரம், விந்து, அர்த்த சந்திரன், நிரோதினி, நாதம், நாதாந்தம், சத்தி, வியாபினி, வியோமரூபை, அநந்தை, அநாதை, அநா சிருதை, சமனை, உன்மனை என்க.

சந்திரனைக் குறிக்கும்போது: ஆதவன் படும் செவ்வியில் - சூரியன் அத்தமிக்கும் வேளையில். படு தல் - தோன்றுதல், மறைதல். மாண்டவரை உச்சி

மீது வயங்கிய கரம் சேர்த்தி - மாட்சிமை பொருந்திய உதயகிரியின் முடிமேல் விளங்கிய கிரணங்களைப் பொருந்தச்செய்து. வரை - மலை. கரம் - கிரணம். மாண்ட - மாட்சிமைப்பட்ட. ஆணவம் இருள் குழாம் மாற்றி - ஆணவமலத்திற்கு ஒப்பாகிய இருட்கூட்டத்தை நீக்கி. பசு மெல் பயிர் வான் உற விளைந்து மணி கான்ற கதிர் - பசிய மெல்லிய பயிர்கள் வானத்திற்பொருந்த வளர்ந்து விளைவுற்று மணிகளைக் கக்கிய நெற்கதிர்கள். கடி நாறு தன் அடி வணங்க வெளிவந்து - விளக்கமுண்டாகின்ற தன் பாதங்களை வணங்கிநிற்க ஆகாயத்தில் தோன்றி. மீன் கணம் மாதர் புடைசூழ மேவி - நட்சத்திரக் கூட்டமாகிய மாதர்கள் பக்கத்திலே சூழ்ந்திருக்கப் பொருந்தி. ஈர் எண் கலை பொலிவு - பதினாறு கலைகளின் பிரகாசம். நெற்கதிர்களில் மணிவிளைதல் உண்டு என்பதைத் திருவிளையாடற்புராணம் மாணிக்கம்விற்ற படலத்திற் காண்க.

இவ்விரண்டு பாடலும் சமப்படுத்திக் கூறியது.

3. பாந்தள் - பாம்பு. கபாலம் - பிரமன் மண்டையோடு. பூமத்தம் - ஊமத்தம்பூ. கொங்கு - தேன். எருக்கு - வெள்ளெருக்கம்பூ. கோமளம - அழகு. புலவோர் - தேவர். மந்தாரம் - மந்தார மலர். தவர் - தவத்தையுடைய முனிவர். சற்று - சிறிது என்னும பொருளது. தா இல் - கேடில்லாத. எண்ணனகு அவயவம் - முப்பத்திரண்டு உறுப்புக்கள். செம்பாதி - நேர்பாதி. தனது - தனக்குரியது. பிரான் திருமேனி அர்த்தநாரி உருவாதலால் ‘செம்பாதி தனது எனக் கொண்டு’ என்றார்.

கங்கை முதலியவைகளில் ஒவ்வொன்றிற்கும் உண்டாம் உரிமை போல உனக்கும் சிறிது இடமே உண்டு என்பது கருத்தெனக் கொள்க.

4. உரு நிறை உவா - வடிவம் நிறைந்த பூரணை. வாக்கும் - ஒழுகவிடும். உம்பர்த்தலம் - விண்ணுலகம். உவர்க்கடல் உயிர்த்த விடம் என்றார் கடலென்ற பெயரொப்புமையால். ஒல்கினர் - துவண்டவர். குரு - நிறம். கச்சு - ரவிக்கை. வாய்மடுத்த - உண்ட. விடம் அயின்று - நஞ்சையுண்டு. ஆற்றல் - வலிமை. மற்று: வினைமாற்று. இருள் - இருட்டு. விளைத்தி - விளையச் செய்கின்றாய். நிசாகரன் என்பது ஒரு நாமம். உள் நிறையும் இருள் - மனத்தில் நிறைந்த அஞ்ஞான இருட்டு. இரித்திடுவள் - கெட்டோடச் செய்வாள். இவளோடு உன்னை வைத்துப் பார்க்கின் பொன்னோடு இரும்பு அனையை. மன்ற - மிகுதியாக. அரி - கருவரி செவ்வரி. பாய - பரந்த.

இவ்விரண்டு பாடலும் பேதப்படுத்திக் கூறியது.

5. மெய் அன்பு - உண்மையன்பு. செல்லல் - துன்பம். அமிழ்து இருப்ப - அமுதாம்பிகை இருக்க. தெற - வருத்த. உழல்வோர் - வருந்தாநிற்போர். கையில் அமுதமிருக்கப் பசிப்பிணிக்கு உழல்வார் போன்று. களிக்கும் முறை - மகிழ்ச்சி அடைதற்கு உரிய வழி. தேற்றாது - தெளியாமல். ககனவெளி - ஆகாயவெளி. வடகுவடு - மேருமலை. கவலும் - கவலை யடையும். இரைக்கும் - ஒலிக்கும். 'கையில் வெண்ணெயிருக்க நெய்க்கு அழுவானேன்' என்பதும் ஒரு பழமொழி. நன்றே: ஏகாரம் எதிர்மறை.

6. மலதிரோதம் - திரோதமலம்: இஃது உயிர்களைப் போகத்தில் அழுந்தச்செய்வது. மாயேயம் - தனு கரண புவன போகங்கள். காமியம் - கன்மமலம்: கான்மியம் எவற்பாலது காமியம் என நின்றது. "கன்மமும் மூலங்காட்டிக் காமிய மலமாய் நிற்கும்" என்னும் சிவஞானசித்தியார் திருவிருத்தப்பகுதியில் "கான்மியம் காமியம் என மரீஇயிற்று" என்றருளினர் ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள். மருட்பிணி - மயக்கத்தைச் செய்யும் கட்டு (பந்தம்). பேரானந்த வெள்ளக்கொழுங்கடல் என்றது சிவத்தை. வள்ளன்மை - கொடைத்தன்மை. எண்ணுனகு அறம் இயற்றியது காஞ்சியில். காணுயலே - கண்டிருக்கின்றாய் என்றபடி. களறு - களங்கம். அணங்கு - வருத்தம். அந்தரத்து - ஆகாயத்தில்.

இவ்விரண்டு செய்யுளும் தானம குறித்தது.

7. குடங்கை மலர் - வளைந்த திருக்கர கமலத்தால். தனு - வில். மலைக்கு மருகன் - சிவபிரான். மலைக்கு மருகனாகிய மைந்தன். மைந்து - வலிமை. சிலைபோலும் மார்பு. சிலை - மலை. குவவு - திரண்ட. புயமாகிய குவடு. மோட்டு இளங்கோங்கு - பெருமை பொருந்திய இளைதாகிய கோங்கரும்பு: என்றது நகில்களை. வண்டு - வளையல். மலங்க - கலங்க. குழைத்தவள் - குழையும்படிச் செய்தவள். இருத்தி - இருக்கின்றாய். வருகென்று: தொகுத்தல். வன்கதக்கனலி - வலிய கோபாக்கினி. பொன்றிவிடுதல் - இறந்துபடுதல். சரதம் - சத்தியம். இவளபூரணி, நிறைந்த சிவத்துடன் இருப்பவள்; ஆகலின். இவளை இல்லாத தானம் ஒன்றில்லை என்றார்.

8. துடிபட்ட - உடுக்கை பொருந்திய. அமிழ்து எனத்தோன்றும் பிராட்டி - அமுதாம்பிகை. முன் உருது - முன்னே வந்துருமல். கடி - மணம். கறு விஞல் - கோபித்தால். கடிபட்டு - கடியப்பட்டு. மாழ்குவை - மயங்குவாய். கலைமதி - நூலறிவு. பாவில் - புலவர் கூறும் கவிகளில். அடிபட்ட பா - (தளை களால் இயன்ற) அடிகளையுடைய பாட்டு. புதுப் பெயர் கலைமதியிலாத தே என்பது.

9. சங்கையால் - சந்தேகத்தால். புலவியில் - ஊடற்காலத்தில். கறுப்புறி - கோபித்தால். கங்கை, கருணை ஆற்றினைக் கைகூப்பும். மான், விழிமானைத் தொழும். தொடையல் - மாலை. வண்டெலாம் கருங் குழல் தாவும். அரவம் ஆடாத பைப்பாந்தளைக் கா என்று வாவும். பாந்தள் - பாம்பு. ஆடாத பாந்தள் என்றது அல்குலை. மங்கை - உமாதேவியார். மற்று: வினைமாற்று. ஆங்கு - அதுபோல. நீயும நுதலாகிய மதியை இறைஞ்சிடுவை. அன்று, ஏ : அசை. அங்கை ஆமலகம் என - உள்ளங்கையில் உள்ள நெல்லிக் கனியை ஒப்பக் கண்கூடாக; உறுதியாக என்றபடி.

10. கைப்போது - கையாகிய மலர். சீறுதலும் - கோபித்த அளவில். கரும்பாந்தள் - கரும்பாம்பு; இராகு. தாழ்க்கலான் - தாமதிக்கமாட்டான். இது காறும் - இதுவரையில். மத்திரில் - உன்மத்தரைப் போல. புகல் - பற்றுக்கோடு; தஞ்சம். செப்பு ஒத்து - செப்பையொத்த. ஞான்று - பொழுது. திமைகரச் செல்வன் - சூரியன். அழுங்கி - துன்புற்று. பட்டதை - பட்ட துன்பத்தை.

இந்நான்கு பாடல்களாலும் தண்டமாகிய உபாயம் கூறப்பட்டது.

## 8. அம்மானைப்பருவம்:

*1.* வம்பு இயல் - மணம் பொருந்திய. மீமிசை- மேல். வாள் - ஒளி. கோல் தொடி - வளைந்த வளையல். அண்டங்கள் பல ஆகலின் சில அண்டம் என்றார். பம்பி அடர் - நெருங்கி அடர்ந்த. முகிழாமையால் - குவியாமையால். பரிசித்தல் - தொடுதலை: அணைதலை என்க. வேட்டதாக - விரும்பியதாக. கூந்தல் ஒளியை இருள் என்றார். துணைமை-நாயகனாகிய சூரியனுடைய தன்மை. விதிர்த்து - நடுங்கி. வெகுளா - கோபித்து. இகந்து ஒருவி - நீங்கி. புருவமாகிய வில்லோடு. மிளிரும் - பிரகாசிக்கும். அமபு இயல் - அமபை யொத்த. தடங்கண் - விசாலமான கண்களையுடையாள்: அன்மொழித்தொகை; அமபிகையைக்குறித்து நின்றது. நித்திலம் - முத்து. ஆரணம் - வேதம். நித்தில அம்மானைகளைப் பல மதியங்களாகக்கொள்க.

*2.* அரம்பையர் - தேவமாதர். அரசுபுரி ஏந்தல் - இந்திரன். குலவரைகள் - அட்டகுல பர்வதங்கள். நுந்தை என்றது பனிமலையை. சிறகு ஈத்தமை - சிறகரிந்தமை. செயிர்த்து - கோபித்து. அவனை - அவ்விந்திரனை. அண்டமுகடு - அண்டத்தின் உச்சி. மீள திகைத்து வீழ்தோறும் - மீள மயங்கி விழும் போதெல்லாம். வெகுளி - கோபம். ஓச்சி - எறிந்து. மருங்கு - பக்கத்திலே. மரீஇ - மருவி. சுலவி - சுழ வன்கண்மை - கொடுமை.

இந்திரனை மரகத அம்மனையாகவும், அவன் உடம்பிலுள்ளகண்கள் தோழியர்கள் விழிநிழலாகவும் கொள்க.

3. நிலாவுறூஉம் - பொருந்தும். கமல மா நிதி - பதுமநிதி. சார்ந்தவர்க்கு - நின்னை அடைந்தவர்களுக்கு. நின் தரம் - உன்னுடைய மேன்மை. வான் - பெருமை. செழுங்கதி - முத்திச்செல்வம். ஈது என - இந்தக் கை என று. அளவளாவி - கலந்து. சேண் வழி - ஆகாயமார்க்கம். ஏயப்ப - ஒப்ப. செம்மணியால் குயிற்று - மாணிக்கக்கற்களால் செய்த. செம்மணியால் குயிற்றிய அம்மனைகள் பதும நிதியாகவும், முத்தங்கொழிக்கும அம்மனைகள் சங்கநிதியாகவும் கொள்க. பதுமநிதி தாமரை வடிவமாகவுள்ளது; சங்கநிதி சஙகு வடிவாகவுள்ளது என்க. சிற்றிடை: அன்மொழித்தொகை.

4. தேம் கலுழி - தேன்பெருக்கு. அம்போருகம் - தாமரை. மடவார் இருவரும் - திருமகளும் கலைமகளும். தவிசு - வெண்டாமரை செந்தாமரை மலர்களாகிய ஆசனம். கவன்று - கவலையடைந்து. ஓரீஇ - நீங்கி. கொழுநர் - சூரிய சந்திரர். போம் இடை - போமிடத்து. இவை - இக் கைகள். மதிக்கு முன்பு குவியாமையைத் தெளிந்து. தோம் கனியும் - குற்றமுதிர்ந்த. மும்மலம் - ஆணவம் கன்மம் மாயைகள்.' ஆங்கு: அசைநிலை. வால் வளை - வெள்வளைகள். தழங்கிட - ஒலிக்க.

பவளத்திழைத்தனவாகிய அம்மனைகளைத் திருமகளாகவும், நித்திலத்தொகையிற் குயிற்றிய அம்மனைகளைக் கலைமகளாகவும் கொள்க.

5. புந்தமிழ்து - புதிய அமிழ்து. உகுத்து - வார்த்து. புரை - குற்றம். பைங்கூழ்த் தொகுப்பு - பயிர்களின் தொகுதி. துவர்க்கொடி - பவளக்கொடி. தத்து அலை விரிக்கும். குடாது கடல் - மேல்கடல். சேத்தல் - சிவத்தல். எல்வை - பொழுது. அத்தம் - அம்பிகை கை. திங்கள் உதயஞ்செய் பொழுதினும் அத்தமனமாகும் பொழுதினும் சிவந்திருத்தலின் அவ்வாறு கூறினர்.

6. மருள் - மயக்கம். நெஞ்சச்சழக்கு - மனத்தில் உள்ள அறியாமை; அது நீதிக்கு மாறுனதுமாம். சழக்கு - குற்றம்; அறியாமை. தடிந்து - போக்கி. இருங்கவின் - மிக்க பொன்னிற அழகு. மலர்வள்ளல் - பிரமதேவன். அராப்பாயலிடை ஏந்தல் - சேஷசயனத்தில் யோகநித்திரை செய்யும் திருமால். நின கொண்கர் என்றது உருத்திரமூர்த்தியை. கொண்கர் - நாயகர். இணைந்து - ஒத்து. மேற்போந்து - (அம் மூன்று நிறத்தினையும் அன்றி) மேலேசென்று. சித்பரம்பொருள் - ஞானவடிவாகிய பரம்பொருள்: சிவம். முத்துமணி தன் நிறமாகிய வெண்ணிறத்தைக்காட்டி நிற்றலால் அவ்வாறு கூறினர். பிரம விட்டுணு உருத்திரர் ஆகிய மும்மூர்த்திகளின் நிறமும் அம் மூர்த்திகளின் மேற்பட்டு விளங்கும் சிவபெருமானது நிறமும் குறித்தபடி. "இப்படியன் இந்நிறத்தன் இவ் வண்ணத்தன் என்றெழுதிக் காட்டொணாதே" என்ற வாக்குச் சிந்திக்க.

நிகர்த்து, ஒத்து, ஆட, ஆடியருள் என முடிக்க.

7. முத்தம் இழைத்தன முழுமதியாம் எனவும், பவளத்திரள் மொய்த்தன என்றாழ் ஆம் எனவும் கூட்டுக. இருள்சீத்து - இருளைத்துடைத்து. என்றாழ் - சூரியன். உணற்கு எழும மூன்று - அரா, நேமி, சகோரம் என்பன. அரா - இராகு கேதுக்கள்; அவை சூரிய சந்திரரை உண்பன; நேமி சூரிய கிரணத்தையுண்பது; சகோரம் சந்திரகிரணத்தை யுண்பது என அறிக. நேமி - சக்கரவாகப்புள். உத்தி - தேமல். முலைக்கு இடைந்து அயல் ஓடியது நேமி, இடைக்கு இடைந்து அயலோடியது அரா என்க. இடைந்து-ஒவ்வாமையால் பிறகிட்டு; தோற்று என்றபடி. உயங்கு - வருந்தும். அரந்தை - துன்பம். திரிவுற்று - சுழன்று. அத்தன் - சிவபெருமான்.

8. வடாது பொருப்பு - வடக்கின்கண் உள்ள மேருமலை. மகிழ்நர் - கணவர். உடங்கு அழி - ஒருசேர அழித்த. மூன்று புரஙகள் - திரிபுரங்கள்; அவை பொன், வெள்ளி, இரும்பால் நிருமிக்கப்பட்டவை; இச்சையின் எழுந்து சென்று அழிக்கும் செயலையுடையன என்க. சூழ்ச்சி - தந்திரம். அழிந்த புரங்களை மீண்டும் உலாவும்படி எழுப்பி, வரம் உதவி, வெளி விடுத்தலையொப்ப. கடுத்தல் - ஒத்தல். முத்தம்மனை வெள்ளிக்கோட்டைக்கும், நீல அம்மனை இரும்புக் கோட்டைக்கும், பொன் அம்மனை பொற்கோட்டைக் கும் உவமானமாகக்கொள்க. ஏர் முடங்கல் உறாது - அழகு கெடாது. அடங்கிய அன்பர் - சாந்தி மேற் கொண்ட மெய்யடியார்கள்: “மோன மென்பது ஞான வரம்பு” என்னும் ஔவையார் வாக்கும் காண்க.

9, நித்தன் - சிவபெருமான். உயங்க - வருந்த. தகையும் - தடைசெய்யும். இன்னும் ஒறுத்தல் உறுது - (முன்னொரு காலத்தில் சிவபிரான் திருக் கண்களைப் புதைத்த காலத்தில் ஒறுத்தாற் போல) இன்னும் ஒறுத்தலைச் செய்யாமல். ஒறுத்தல் - வருத்துதல். உறவு ஆடி. நயப்பம் - விரும்புவோம். செங்கதிர் - சூரியன். பனிக்கதிர் - சந்திரன். கேண்மை- நட்பு. பவளத்தின் இழைத்த அம்மனை சூரியன், முத்தின் இழைத்த அம்மனை சந்திரன் என்க. ஐய நுசுப்பு - உண்டோ இல்லையோ என்னும் ஐயத்துக் கிடமாகிய இடை. ஒசிய - துவள.

10. கண் படை - கண்ணாகிய ஆயுதம். மலம் - ஆணவம்: அதனை இருண்மலம் என்பர். துற்ற - நெருங்கிய; செறிந்த. மும்மலம் வென்ற பிரதாபம். திறல் - வல்லமை. பிரதாபம் - வீரம். பிரதாபம் செம்மை நிறமும், கீர்த்தி வெண்ணிறமும் எனச் சொல்வர். மான: உவமவுருபு. பிறகு - பின். அதிர் வளை: வினைத்தொகை.

. நீலமணியாலாய அம்மனை மேற்செல்லல் அம்மை யாருடைய திருவருட்பார்வையால் அடியார் மலம் ஓடுதலை ஒத்தது. பவள அம்மனை செந்நிறமுடைய தால் அம்மலங்களை வென்றவீரம் என விளங்கியது. முத்த அம்மனை வெண்ணிறமுடைய கீர்த்தி திரண் டெழுதலை ஒத்தது எனக்கூறினர்.

## 9. நீராடற்பருவம்:

1. தானும் என்றது பாலிநதியை. பிணியும் பவமும் தெறுதலால். பிணிப்பவம் - பிணியாகிய

பவம எனினுமாம்: முன்னது உம்மைத்தொகை; பின்னது பண்புத்தொகை. கலி - ஒலி. வேட்டு - விரும்பி. விண்ணத்து உயர்ந்து - ஆகாயத்தின்மேல் எழும்பி உயர்ந்து; அத்துச்சாரியை. உடு - விண்மீன். கிளைக்குலம் - மூங்கிற்கூட்டம்: அவை மலைமிசை யுள்ளன. கிளைக்குலம் கான்ற மணி - மூங்கிலில் தோன்றும் முத்தங்கள். தமது சாதி என்றது விண் மீனினம் என்க. ஓகை - (உவகை) மகிழ்ச்சி. கூர - மிக. உடுக்கூட்டம் ஓகைகூர. எற்றி - மோதி. வெறி நறு - மணமுள்ள தேன்.

எழுந்தால் என்ன உயாநது எறறு ஈனறுவரு பாலிநதி எனக்கூட்டுக. இப்பாலாறு தொண்டை நாட( ) உரியது.

2. கவுள் - செவியின் அடி. கடாம் கமழ் - மத சலம் மணக்கும. எறுழ்வலி - மிக்கவலி; மீமிசைச் சொல். எழிலி - மேகம. குழாத்தில்: இல் உவமவுருபு. பெயர்ந்து உழிதரும - சுழலும்; உழலும் என்க. சிகரி - மலை. ஆதி நான்கும் - முதலாகவுள்ள நானிலமும். நானிலம் குறிஞ்சி மருதம் முல்லை நெய்தல் என்பன. ஆற்ற தருவளன் - மிகவும் தரும் பண்டங்கள். அடங் கத் தழீஇக்கொண்டு - முழுவதும் வாரியடித்துக் கொண்டு: எல்லாவற்றையும் பொருந்தக் கொண்டு எனக்கொள்க. அவை - அந்நான்கு நிலங்களும். கலி கூராவகை - வறுமை மிகாதபடி. சால - மிகுதி யாக, அனந்தம் - அளவற்றது. தண்டாது - ஒளிந்து- நீங்காமற் கொடுத்து. உவரி - கடல். சிவனடியார்கட்கு ஒன்று செய்யின் கோடியாகப் பல்கும் என்றபடி.

"சிவஞானச் செயலுடையோர் கையிற்றுனம் திலமளவே செய்திடினும் நிலமலைபோற் றிகழ்ந்து, பவமாயக் கடலினழுந் தாதவகை யெடுத்துப் பரபோகந் துய்ப்பித்துப் பாசத்தை யறுக்கத், தவமாரும் பிறப் பொன்றில் சாரப்பண்ணிச் சரியை கிரியா யோகம் தன்னிலுஞ்சாராமே, நவமாகுந் தத்துவ ஞானத்தை நல்கி நாதனடிக் கமலங்கள் நணுகுவிக்கும் தானே" என்றும் சிவஞான சித்தித் திருவிருத்தம் சிந்திக்க. அருள் நிலை - திருவருள் நிலை. அழியாததிரு - முத்திச்செல்வம். மாக்கள் - விலங்குகள். வெருவி - அஞ்சி. தழங்கி வரு - ஒலித்து வரு.

தழீஇக்கொண்டு, அளித்து, ஒத்து, தழங்கி வரு பாலிநதி எனா இயைக்க.

3. அயில்கொண்ட வாளி - கூர்மை பொருந்திய அம்பு. வயங்கிய - விளங்கிய. அரித்திரள் - சிங்கக் கூட்டம். குஞ்சரம் - யானை. சுழிமூன்றுவன - குவட்டைச் சுழிக்கும் சுழி, அரித்திரளைச் சுழிக்கும் சுழி, குஞ்சரத்தினைச் சுழிக்கும் சுழி என்க. மூன்று சுழிகளையும் மும்மதிலாகக்கொள்க. குவடு பொன்னிறம், அரித்திரள் வெண்ணிறம், குஞ்சரம் கருநிறம் உடையதாகப் பொருத்துக. மூவகைச் சுழியினின்றும் வாளை மீன்கள் துண்ணென்று எழுந்து, விண்ணிற்சென்று, கங்காநதியில் திளைக்கின்றன. இப்புனல் என்றது பாலிநதிப் புனலை. இப்பாலிப் புனலில் ஆடும தவப் பயனைப் பூதசார சரீரமாகிய தேவசரீரத்தில் எய்தாது, பூதபரிணமசரீரத்தில் எய்த உதவும் மகாதீர்த்தம் இது என்ன வியப்பினை விளைத்து விண்ணோடும் பழிச்ச வரும் பாலி என்க. பழிச்ச - துதிக்க. திளைத்தல் -

அநுபவித்தல். பூத பரிணம சரீரம் - பஞ்சபூத விகாரத்தால் உண்டாகிய தூலவுடம்பு.

4. தீம்பயம் பருகி - இனிய நீரையுண்டு. செல் இனம் - மேகக்கூட்டம். படர்தல் - செல்லுதல். புரைத் தொகை - குற்றங்களின் மிகுதி. பொள்ளென - விரைவாக. இரிந்தோடல் - கெட்டோடல். புரைய - ஒப்ப. தும்பி - வண்டு. இரைத்து - ஒலித்து. மணிவானம் - கரிய ஆகாயம். மணி - நீலம். ஏறிடுதல் - சோர்ந்தல். விரைத்துணர் - மணமுடைய பூங்கொத்துக்கள்.

செல் இனம் வான் படர்தலும், மலமாயை கன்மக் குழாம் இரிந்தோடலும் புரைய, தும்பி முழுதும் வானத்து எழுந்தோட நீராடும் மகளிர் பரவ இயைக்க.

5. தாமம் - மாலை. குழற்கற்றை - கூந்தலின் தொகுதி. கூட்டுவிட்டு - அவிழ்ந்து. மாதர் - அழகு. சுருப்பு இனம்: வலித்தல். முகேர் எனல்: ஒலிக்குறிப்பு. தாது - மகரந்தம். பிணிமுகம் - மயில். தெய்வப்பிறை - தெய்வப்பெண்கள். பெரும்புலவர் - பெருந்தேவர்கள். இன்ப நீர் - அகமகிழ்ச்சியாகிய நீர்.

6. வாரணம் - யானை. மருப்பினையும் காலையும் உடைய வாரணம் என்க. பரவை கலக்கும் மலை - திருப்பாற்கடலைக் கடைந்த மந்தரமலை. வாரிதி - கடல். மாந்தும் - உண்ணும். முகில் - மேகம். ஆலி - ஆலங் கட்டி. பரப்பினிடை - அம்முத்துக்களின் பரப்பிடத் தில். யானைக்கு மேகமும், தாளக்குவைக்கு ஆலியும் உவமானம். தாளபரப்பிற்கு வான்மீனும், சங்கினங் கட்குப் பல மதியமும் உவமானமாம். வதிந்தால் நிகர்ப்ப - தங்கினலொப்ப.

7\. கமலமலர் மடவார் - நாமகள் பூமகள் இருவரும். அமிழ்தே: அமுதவல்லியே என்பதன மரூஉ. வல்லேம் - வன்மையையுடையேம். வஞ்சினம் - சபதம். துண்ணென்று - விரைவாக. துருவி - தேடி. எம் கொழுநர் என்றது அக்கமலமடவார் நாயகர்களாகிய அரிபிரமரை. அருள் பொழியும பசிய முகில் அம்பிகை. முகில்: விளி.

8\. திளைத்து - அழுந்தி. சேண் - தூரம்; சேய்மை. உரையும் தொழிலும் உள்ளமும் - வாக்கும் மனமும் காயமும். தன்னுழை - தன்னிடத்து. சேர்த்து அழுந்துவோர் - மனவாக்குக்காயங்கள் ஒரு நெறிப்பட நின்று இரண்டறத் தியானித்து அழுந்தும் உண்மைஞானமுள்ள மெய்யன்பர். ஒருவும் - நீங்கும். தெரித்து - தெரிவித்து. இதழி உறழ - கொன்றை மலரை ஒப்ப. துவர்க்கொடி - பவளக்கொடி. நுடங்க - அசைய. புரையும் - ஒக்கும்.

விலக்கி, தெரித்து, நடித்து, வெளுத்துப்புரையும் பாலி எனக் கூட்டுக. சிவபிரானுக்குப் பளிங்கு நிறமும் உண்மையால் இவ்வாறு கூறினர்.

9\. முண்டகம் - தாமரை. சங்கொடு சங்கம் - வளையல்களோடு சங்குகள். மகர இருங் குழை - மகர மீன் வடிவாகச் செய்யப்பட்ட பெருமை உடைய காதணி. எதிரிய - எதிர்த்த. சுணங்கு - தேமல். புற்புதம் - குமிழி. இற - இற்றுப்போக. அறல் - கருமணல். தகரம் - மயிர்ச்சாந்து. மகரம், கெண்டை, மலங்கு, கயல், வாளை என்பன மீன்வகை.

அயர, புரள, கலங்க, எழுந்து, குதிப்ப, ))ற, அழியப் புகழ்நிறையும் கமலாகரி என்க.

10. விற்புருவம் - வில்லாகிய புருவம். குழைய - வளைய. நீலவிழித்துணை செங்குவளை வெல்ல - கரிய கண்களிரண்டும் பாலிப்புனல் ஆடுதலால் சிவந்து செங்குவளை மலரை வென்றிகொள்ள. சினத்தால் " கருங்குவளை செங்குவளையாயினள் " என்றபடி. சிவிறி - நீர்தூவும் துருத்தி. நிரத்தல் - நிறைதல். சடாமகுடம்: பண்புத்தொகை. காசினி - நிலவுலகு. கொண்டாட - புகழ.

## 10. ஊசற்பருவம் :

1. - ஒழுங்குபடச் செய்து. உரகம் - பாம்பு. நிறுவி - நிறுத்தி. அதன் உம்பர் - அத் தூணின் மேல். இழியும் - ஒழுகும், இறங்கும். பரிந்து - விரும்பி.

2. செயலை - அசோகு. உதைக்கு - நின்கால் உதைக்கு. ஆற்றுது - பொறுக்காமல். தனை என்றது அசோகை. தேவை - சிவபெருமானை. தணந்து - நீங்கி. விளையாட்டு இயலை - குழந்தை வடிவங்கொண்டு விளையாடும் தன்மையை. அதற்கு - அவ்வலர்ப்பகழிக்கு. பகழி - அம்பு. ஊழ்த்து - மலர்ந்து. துணைமை - துணையாகும் தன்மை. வாளி - அம்பு. ஏர் - அழகு. ஐம்படை - பஞ்சாயுதங்கள். அவை: சங்கு சக்கரம் வாள் கதை வில் என்பன. செயலை பூக்கள் சொரியும் செயல் அலர்ப்பகழி சொரிவது எனவும், முல்லை அலர் சொரிந்திடல் அவ்வசோகிற்குத் துணைமை பூண்டு

தானும் மலர் வாளி பெய்திடும் திறன் எனவும் ஏர் காட்ட எனக் கூட்டியுரைக்க. மகளிரால் மலரும் மரங்கள் பத்தினுள்ளே அசோகு உதைக்க மலரும், முல்லை சிரிக்க மலரும் ஆதலின், இவ்வாறு கூறினர்.

அம்பிகை சிவபிரானை நீங்கியிருத்தலால் அவளை அப்பெருமான்பக்கல்சேர்க்க அசோகும் முல்லையும் அலர் சொரிந்தன என்பது கருத்து. மரங்கள் பத்தாவன : மகிழ், பாலை, பாடலம், முல்லை, புன்னை, குரா, அசோகு, குருக்கத்தி, மா, சண்பகம் என இவை. மலர்தற்குரிய விவரம் சூடாமணிநிகண்டு பன்னிரண்டாம் தொகுதியிற் காண்க.

3. உயிர்ப்பயிர் - உயிராகிய பயிர். மலம் - மும்மலங்கள். நீத்து - நீக்கி. மெய்ஞ்ஞானம் மலரா - மெய்ஞ்ஞானமாகியமலர் மலர்ந்து. கனிந்து - பழுத்து. ஓங்க - உயர்வடைய. அருட்சூல் - அருளாகிய கருப்பம். கலம் - ஆபரணம். உரு - வடிவம். நாப்பண் - நடுவிடம். கார்முகம் - வில். கவின - அழகுசெய்ய. வாங்கி - வளைத்து. சிலம்பு - காலணி. பருமம் - இடையில் அணியும் பதினன்கு கோவை மணிவடம். தீங்குரல் - இனிய குரல். வாய்ப்ப - பொருந்த. வான் - ஆகாயம். புலம் - அறிவு. ஆட்டும்போது ஊஞ்சல் மேலெழுந்து நிற்றலால், வான்சேர்ந்து உலாய்நிற்றல் உறழ என்றார். உயிர்ப்பயிர் கனிந்து ஓங்க என இயையும். ஓங்க என்னும் செயவென் எச்சம் ஈண்டு எதிர்காலத்தில் வந்தது. ஓங்க என்பது பொழி என்பதனேடும், உறழ என்பது ஆடியருள் என்பதனேடும் இயையும். இச்செய்யுளில் அம்பிகையை மேகமாகக் கூறியுள்ளார்.

4. இடைந்து - வருந்தி. பின்காட்ட என்றதனால் மனவேகத்தினும் மிக என்றவாறு. மணி - முத்து என்க. வழி - திருவுளக்குறிப்பின்வழி. அனம் - அன்னத்தின் நடையைக் குறித்தலால் ஆகுபெயர். மடுத்து - கையில் நிறைத்து. பரவா - எங்கும் பரவி. நிரத்தல் - கலத்தல். அனைத்தும் நின்மயம் என்பது சர்வம் சத்திமயம் ஜகத் என்னும் வேதவாக்கியத்தைக் குறிக்கும். இவலை பரவா ஏய்ப்ப என இயைக்க.

5. ஊக்கல் - அசைத்தல். இழைத்த - செய்த. அது நோக்கி - (குழைகள் செவியாகிய ஊசல் ஆடுகின்ற) அதனை நோக்கி. கயற்குலம் அசைக்கும் அவ்வூசலில் - கண்ணாகிய கயல்கள் அசைக்கும் காதுகளாகிய அவ்வூசலைப்போல. அரும்பு - தோன்றுகின்ற. வலித்து - இழுத்து. சாய - கவிழ. புங்கவன் - சிவபெருமான்.

6. பொலம் சிகரி - பொன்மலை. வாங்கிய - வளைத்த. மறை ஓதிமம் - பிரமதேவனாகிய அன்னம். பழிமொழி - அபவாதம்: திருமுடியைக் கண்டேன் என்னும் பொய்மொழி. ஊர்தி - வாகனம். தண்ணிய - சாந்தமுள்ள. தாள் என்றது அம்பிகை திருவடியை. ஏல்வை - காலம். அதனை - அம் மறையோதிமத்தை. அலமரக்காண்டும் - சுழலச் செய்வோம். ககனத்து - ஆகாயத்து. தரளப்பலகைக்கு ஓதிமம் உவமை. புண்ணியம் வெண்மைநிறம்.

7. சுற்று - பலகையின் சுற்றுப் பக்கத்தில் பதித்து. )டை - அப்பலகை நடுவில். அலங்கு - இரவு - இரா.

ஒப்பவும், காட்சி கடுப்பவும் ஊசலாடியருள் எனக் கூட்டுக. புரவு - புரத்தல். சரீரத்தினுள்ளே மூன்று மண்டலம் உண்மையைச் சிவபூசை செய்வோர் உணர்வர்.

8. சுத்தமாயை அசுத்தமாயைகள் தூண். ஆணவம் நேர் விட்டம். கனமம் வடம். தூக்கிய - தொங்கவிட்ட. மாயேயம் - தனுகரண புவன போகங்கள்: பலகை. புவன கோடிகள் ஆடும் வெளி. உயிர் குழந்தை. மரணம் பிறப்புக்கள் மணியூசல். கடைத்தலை - கன்மம் தொலைந்த காலத்தில். முடங்காது - மடங்காமல். முதுக்குறைவு - பேரறிவு. மூவாத - கெடாத. ஆனந்தம் - சிவானந்தம். புத்தமிழ்து - புதிய அமிர்தம்.

9. நாந்தகம் - வாள். விதிர்த்தல் - அசைத்தல். நாட்டம் - கண். நளினம் - தாமரை. முகில் - மேகம். வேய்ந்த - அணிந்த. பூண் - ஆபரணம. தோற்றம் - காட்சி. பரிபாக பேதமார்க்கம் - பக்குவ வேறுபாட்டு நெறி. மன்னி - பொருந்தி. தோற்றம் காட்ட ஆடியருள் என்க.

10. மண்டிப்படர்ந்த-நிறைந்து பரவிய. ஆனந்த வெள்ளம் - சிவம். சிவதருமம் - சரியை கிரியா யோக ஞானங்கள். ஒருங்கு - முற்றும். சங்கமம் - அடியார் கூட்டம். புண்டரம் - ஈண்டு விபூதிக்குறி.

குறிப்புரை முதலியன முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்

# செய்யுள் முதற்குறிப்பகராதி

எண் - பக்கஎண்


| | | | |
|---|---|---|---|
| அசும்புபட | 32 | கடவுட்பொலம | 24 |
| அண்டப்பரப் | 64 | கடிகொண்ட | 39 |
| அதிருந்தரங் | 6 | கடிப்போதலர் | 6 |
| அயில்கண் | 40 | கதிருமிழ் | 52 |
| அரக்கெழில் | 26 | கந்தங்கம | 18 |
| அரவமுமிழ் | 62 | கார்பூத்த | 12 |
| அருள்பெறு | 28 | குஞ்சியசை | 38 |
| அளிக்காதர | 7 | குடங்கைமல | 41 |
| அளிசுரந்தம | 2 | குலத்தில் | 15 |
| இகந்தமன | 31 | கைப்போது | 46 |
| இருகவுள் | 53 | கொங்குவிரி | 20 |
| இருளகால | 17 | கொழுதுவரி | 30 |
| இருள்பூத்த | 47 | கொழுந்தாமம் | 55 |
| இலகொளி | 8 | கோலநெடும் | 16 |
| இளம்பருவ | | சங்கையா | 45 |
| உய்யவரங் | 51 | சிறகரளி | 9 |
| உருநிறை | 42 | சீர்கொண்ட | 2 |
| உருப்பொலி | 23 | சுத்தமுமசுத்த | 63 |
| உள்ளொளி | 23 | சுரும்பர்துனை | 19 |
| | 56 | சுலவித்தரள | 20 |
| ஐவகைச் | 24 | சுறவேறிய | 33 |
| ஒழுகொளி | 59 | செயலையங் | 59 |
| ஒழுங்குபடு | 48 | சேட்டின | 32 |
| | 4 | தவப்பயனை | 26 |
| கங்கையும | 42 | தவளக்குருஉ | 5 |

திங்களொளி 61
திண்ணிய 62
திரைத்தொலி 54
திரையுந்தன 57
25
க 39
துடிபட்ட 45
துளிக்கும் 7
துளிபட்ட 35
தெய்வச்சுருதி 38
தெளிக்குமெய் 43
தேங்கலுழி 48
தேங்கிய 53
நாந்தகப் 63
நிலமபொலி 60
பகைத்தபுரி 29
பரந்தவெண் 21
பல்லுயி 14
பவளக்கொடி 21
பிதிரும்பொறி 30
புத்தமிழ்து 49
பெருகாரமிழ் 34
பொங்கரி 11
பொங்கெழி 14
பொருவரிய 11
பொன்பூத்தலர் 41
மடல்கொண்ட 33
மணங்கேழ் 18
மணிகொண்ட 1
மணிதுற்ற 12
மண்டலம் 41
மதுகரமுல 27
மதுரங்கொழி 17
மருள்கான்ற 50
மலங்கடங்கு 22
மனக்குலம் 60
மனம்வாக்கி
மாங்குயில் 4
முகமலரிணை 57
முக்கனி 13
முத்தமிழை 50
முழுங்குமிசை 27
வடங்கெழு 51
வணங்கு 44
வம்பியறுடை 47
வயிராவண 36
வழியுஞ்செழு 56
வளைத்தகரு 29
வளைத்தமுப் 54
வானமெழுங் 15
விந்தையங 37
வில்லுமிழ் 36
விற்புருவம் 58
வெள்ளித் 35

செய்யுள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.